POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# தி.மு.க. கவுன்சிலர்கள் அராஜகம்

Regd. No. TN - MS [C] 244 Phone: 4 0212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10| சென்னை 23-9-1986 செவ்வாய் -:- அவனியூர் புதன் 24 9 1986 |இதழ 327

## திருவண்ணாமலை நகரசபை அலுவலர்கள் மீது தாக்குதல்

### நகரில் பதட்டநிலை - வேலை நிறுத்தம்

**திருவண்ணாமலை, செப். 23- திருவண்ணாமலையில் நகரசபை தி.மு.க. கவுன்சிலர்கள் ரவுடித்தனத்தில் ஈடுபட்டனர். நகரசபை ஊழியர்களைத் தாக்கியுள்ளனர், நகர சபை ஆணையரையும் தாக்க முற்பட்டனர். இதனால் இங்கு பதட்டநிலை ஏற்பட்டிருக்கிறது ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.**

திருவண்ணாமலை நகர சபை தி.மு.க. உறுப்பினர்கள் நேற்று அராஜகமான வகையில் அடிதடியில் ஈடுபட்டனர்.

நகரசபை ஆணையரை அந்தத் தி.மு.க. கவுன்சிலர்கள் தகாத வார்த்தைகளைப் பயன்படுத்தி இழிவாகப் பேசினார்கள். அப்போது அந்த நகர சபையின் தி.மு.க. தலைவர் முருகையனும் இருந்திருக்கிறார்.

தனது கட்சியினர் நடத்திய அந்த அராஜக செயலை ஆமோதிப்பது போல ஏதும் பேசாமல் இருந்தார். தி.மு.க. கவுன்சிலர்களது இழிவான வார்த்தைகளை தாங்க முடியாமல் தாங்கள் தாக்கப்படுவோமோ என்று அஞ்சி ஆணையரும், பொறியாளரும் வெளியேறினார்கள்.

#### கழுத்தைப் பிடித்து...

இந்த சம்பவம் பற்றிக் கேட்கவந்த நகர சபை ஊழியர்களையும் இவர்கள் கழுத்தைப் பிடித்து தள்ளி தாக்கி இருக்கிறார்கள்.

நகர சபை கிளார்க் சுப்பையா என்பவரை கழுத்தைப்பிடித்து தள்ளி இருக்கிறார்கள். அண்ணாமலை என்பவரைத் தாக்கி அவரது சட்டையை கிழித்திருக்கிறார்கள். அருணகிரி என்ற ஒரு தி.மு.க கவுன்சிலர் நாற்காலியை எடுத்து வீசிஅடித்தாராம். இந்த நாற்காலி பறந்து சென்று கழக நகரசபை உறுப்பினர் ஏழுமலையின் முட்டியை உடைத்தது.

இந்த சம்பவம் குறித்து நகரசபையைசேர்ந்த கழக உறுப்பினர்கள் ஊர்வலமாகச் சென்று அந்த தி.மு.க.ரௌடிகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று மனு கொடுத்தனர்.

தி.மு.க.வினரின் ரவுடித்தனம், வன்முறையை கண்டித்து நகர சபை ஊழியர்கள் இன்று வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தி.மு.க. வினரின் வன்முறை வெறியாட்டத்தால் திருவண்ணாமலையில் பதட்ட நிலை ஏற்பட்டிருக்கிறது.

## பர்மா பஜாரில் சகஜநிலை

சென்னை. செப். 23— பர்மா பஜாரில் நேற்று நிலவிய பதட்ட நிலை நீங்கி இன்று காலை சகஜநிலை ஏற்பட்டுள்ளது. அந்த வழியாக வழக்கம் போல் பஸ் போக்குவரத்து நடைபெறுகிறது.

நேற்றைய சம்பவத்தில் 42 போலீசாருக்கு காயம் ஏற்பட்டது. 28 பொது மக்களும் காயத்துக்குள்ளானார்கள். இந்த சம்பவம் தொடர்பாக 28 பேர் கைதாகியுள்ளனர்.

## சவூதி அரேபிய தேசிய தினம்: ஜைல்சிங் வாழ்த்து

புதுடெல்லி, செப்.23— சவூதி அரேபியாவின்தேசிய தினத்தையொட்டி அந்நாட்டு ஆட்சிபொறுப்பிலிருக்கும் மன்னரும் பிரதமருமான பாட்மின் அப்துல் அஜீஸ் அல் சாட்க்கு ஜனாதிபதி ஜைல்சிங் வாழ்த்துசெய்தி அனுப்பியிருக்கிறார்.

உங்களின் தனிப்பட்ட நலத்துக்கும் நாட்டுமக்களின் க்ஷேமநலத்திற்கும் என் இதயங்கனிந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன் என்று அந்தச் செய்தியில் ஜைல்சிங் கூறியிருக்கிறார்.

## 2 மீனவர்கள் குடும்பத்திற்கு இன்சூரன்ஸ்

தஞ்சை. செப் 23— தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த பூக்கொல்லையில் தமிழ்நாடு மீன்வளத்துறை அதிகாரிகளின் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது.

கூட்ட முடிவில் மீனவர் காப்புறுதித் திட்டத்தின் கீழ், சேதுபாவாசத்திரத்தில் இறந்த மீனவர் முகமது இஸ்மாயில் மனைவி நபீசாம்மாள், ஆமகாட்டுசத்துறையில் இறந்த மீனவர் மாரியப்பனின் மனைவி மாதா ஆகிய இருவருக்கும் மீனவர் காப்புறுதித் தொகை ரூபாய் 15 ஆயிரத்துக்கான காசோலைகளை அமைச்சர் கோவிந்தன் வழங்கினார்.

## புரட்சித்தலைவர் 28-ந் தேதி சென்னை திரும்புகிறார்

சென்னை, செப் 23 முதல்வர் புரட்சித் தலைவர் வரும் 28—ந் தேதி சென்னைக்கு திரும்புகிறார். என தலைமைச் செயலாளர் பத்மநாபன் தெரிவித்துள்ளார்.



முதல்வர் புரட்சித் தலைவர் தாயகம் திரும்புவது குறித்து அவர் தலைமைச் செயலாளர் நிருபர்களிடம் கூறியதாவது:—

முதல்வர் அமெரிக்காவிலுள்ள நியூயார்க்நகரத்தில இருந்து 25 ந் தேதி இரவு 8 30மணிக்கு விமானத்தில புறப்பட்டு 26-ந தேதிஇரவு 11 30 மணிக்கு டெல்லி வருகிறார் 27-ந தேதி பிரதமர் மற்றும் உள்ள முக்கிய தலைவர்களை சந்தித்து பேசுகிறார் 28-ந தேதி சென்னை திரும்புகிறார்.

எந்த நேரத்தில் வந்து சேருகிறார் என்பது பிறகு முடிவாகும் இப்போது நல்ல உடல் நலத்துடன இருக்கிறார். இன்று செவ்வாய் டாக்டர்களை சந்தித்து பரிசோதனை செய்து கொள்கிறார்.

இவ்வாறு பத்மநாபன் கூறினார்





## கபில்தேவுக்கு பொதுச்செயலாளர் இராகவானந்தம மோதிரம் பரிசு

சென்னை செப். 23— சென்னையில் ஆஸ்திரேலிய - இந்திய அணிகளுக்கு இடையே நடந்த முதலாவது கிரிக்கெட் டெஸ்ட்டில் சிறப்பாக விளையாடிய இந்திய அணி கேப்டன் கபில் தேவுக்கு கழக பொதுச் செயலாளர் இராகவானந்தம் மோதிரம் வழங்கினார்.





## ஆக்கி: இந்திய பெண்கள அணி வெற்றி

சியோல். செப். 23— தென் கொரியாவில் நடைபெறும் 10 வது ஆசிய விளையாட்டுப் போட்டிகளில். இன்று இந்திய பெண்கள் ஆக்கி குழு மலேசியாவை எதிர்த்து விளையாடியது

இறுதியில் 2 க்கு 1 என்ற கோல் கணக்கில் இந்திய பெண்கள் அணி வெற்றி பெற்றது.

## திருச்சி தஞ்சையில் மழை

திருச்சி. செப். 23— திருச்சி மற்றும் தஞ்சாவூர் மாவட்டங்களில் பரவலாக மழை பெய்துள்ளது.

திருச்சி மாவட்டத்தில் அரியலூர். ஆகிய பல இடங்களில் மழைபெய்தது.

தஞ்சை மாவட்டத்தில் பொன்னையார், தரங்கம்பாடி ஆகிய இடங்களில் மழை பெய்தது.

## போதைபொருள்களுக்கு அடிமையாகியுள்ள அரேபிய நாட்டு மக்கள்

உலக நாடுகளிடையே அரபிய நாடுகள தான் இன்று அதிக அளவில் போதைப் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. கஞ்சா செடிகள் வீட்டுக்கு வீடு மத்திய கிழக்கு நாடுகளான அரேபியா, எகிப்து, ஈரான், ஈராக். துபாய், லெபனான் முதலிய நாடுகளில் பயிரிடப்படுகிறது.

ஆப்கானிஸ்தானை, பாகிஸ்தான், துருக்கி. மொராக்கோ. சூடான் ஆகிய நாடுகளுக்கு அடுத்தபடியாக இன்று லெபனான நாட்டில்தான் பெரும் அளவு போதைப் பொருள் உற்பத்திசெய்யப்படுகிறது எண்ணெய் வளம் தான் வளைகுடா நாடுகளில செழுமை வாய்ந்ததாக இருக்கிறது என்று கூறப்படுவது உண்மைதான்.

ஆனால் அதேநேரத்தில் இந்த முஸ்லிம் நாடுகளில் கஞ்சா, அபின். ஹிராயின், போன்ற போதைப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

போதைப் பொருள்களை உற்பத்தி செய்வதில் பெரும் வர்த்தகர்கள் அரசியல் வாதிகள் பணக்காரர்கள் இப்படி பலதரப்பட்டவர்களும் அந்நிய நாடுகளில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

போதைப்பொருள்களை குறிப்பாக கஞ்சா அபின் ஆகியவற்றை மற்ற நாடுகளுக்கு கடத்துவது மூலம் கோடிக் கணக்கான பணத்தை இவர்கள் சம்பாதித்து கொள்ளுகிறார் கள். மாளிகை தொழிற்சாலைகள் மிகப்பெரிய நட்சத்திர ஓட்டல்கள், எண்ணற்ற உயர் வகை கார்கள் தங்கம்வெள்ளி நகைகள், தொலைக்காட்சிபெட்டிகள் இப்படி பல ஆடம்பர வசதிகள், ஏங்கும்இடங்கள் ஆகியவற்றை ஏற்படுத்திக் கொண்டு இந்தநாடுகளைச் சேர்ந்த பலர் கோலாகலமான வாழ்க்கைநடத்திக் கொண்டு இருக்கிறது.

இதன் காரணம் பணக்கார வீட்டு இளைஞர்கள் தங்களின் சொத்துக்களை ஆடம்பரமாக செலவு செய்வதில் ஈடுபடும்போது அவர்கள் போதைபொருளகளைத்தான் பெரிதும் விரும்பி அனுபவிக்கிறார்கள்.

### ஹிப்பி கூட்டத்தினர்

அடுத்ததாக ஒரு நாட்டில் இருந்து மற்றொரு நாட்டுக்கு சரமாரியாகவந்து சுற்றுக் கொண்டிருக்கும் சேம்பேறி "ஹிப்பி" கூட்டத்தனர் உபயோகிக்கிறார்கள்.

இவர்கள் போதைப் பொருளை பயன்படுத்தாமல் இருக்க முடிவதில்லை

மாரிஜுனா, ஹினா, எல். எஸ், டி. மாத்திரை, மார்பைன். ஹீராயின், இப்படி பல்வேறு வகை போதைப் பொருள்களை இவர்கள் உபயோகித்து தங்களை மெய்மறந்து இருக்கிறார்கள். மற்றவர்களுக்கும் வினியோகித்து "சொர்க்க" போதையில் ஈடுபடுத்துகிறார்கள்.

இஸ்ரேல் நாட்டில் மட்டும்சுமார் 2 லட்சம் பேர் போதைப் பொருள்களுக்கு அடிமையாகியுள்ளனர்.

பாகிஸ்தானில் சுமார் 2 லட்சம் பேர் கஞ்சா, அபின் ஆகியவற்றில் கட்டுண்டு கிடக்கிறார்கள்.

### ஆண்டு தோறும் அதிகரிப்பு

இந்த எண்ணிக்கை ஆண்டுதோறும் சுமார் 40 சதவிகிதம் அதிகரித்து வருகிறது. ஈரானில் மட்டும் சுமார் ஒன்றரை லட்சம் பேர் அபினுக்கும் ஹீராயினுக்கும் அடிமையானவர்கள்.

பாகிஸ்தானிலிருந்தும் ஆப்கானிஸ்தானில் இருந்தும் ஏராளமான அபினும், கஞ்சாவும் ஈரானுக்குவந்த வண்ணம இருக்கிறது.

இந்தக் கடத்தலை தடுக்க ஈரான் ஆண்டு தோறும் சுமார் 7 கோடி ரூபாய் செலவுசெய்கிறது விளைவு பூஜ்யம்தான். போதைப் பொருள்கள் தொடர்ந்து விற்பனை செய்யப்படுகின்றன

ஹசிஷ் என்கிற போதை பொருள்களை பயன்படுத்துவதில் உலகத்திலேயே எகிப்துதான் முன்னணியில் இருக்கிறது.

எகிப்தில் இன்று சுமார் 20 லட்சம் பேர் போதைப் பொருள்களுக்கு அடிமையாகியுள்ளவர்கள்.

எகிப்தில்ஒருகிராம்ஹிராயினின் விலைசுமார் 120 அமெரிக்க டாலர் சுமார் ஆயிரத்து 500 ரூபாய்.

லெபனானுக்கு அடுத்தபடி போதைப்பொருள்களை உற்பத்திசெய்வதில் முதலிடம் வகிப்பது மொரக்கோ.

கஞ்சா செடி பயிரிடுபவர்களில் முதன்மையானவர் மொரக்கோ மன்னர் அசான்ஆவார். இவருக்கு கஞ்சாசெடி பயிர்செய்யும் ஏராளமான நிலப்பரப்புச் சொந்தம். கஞ்சா பயிரிடுவது அதை வெளிநாடுகளுக்கு அனுப்புவது இதுதான் இந்த மன்னருக்கு முக்கிய வேலை. போதைப் பொருள்களை விற்பனை செய்தே அரபிய நாடுகளைச் சேர்ந்த பெரும்பாலோர் கொழுத்த பணக்காரர்களாக வாழ்கிறார்கள்

மத்தியதரைகடலைச்சுற்றியுள்ள நாடுகள் அனைத்திலும் இன்றுமூலைமுடுக்குகள் எல்லாம் காட்சி அளிப்பது கஞ்சாவும், அபினும்தான்,

—தகவல் ஜெகரான்டைப்ஸ்

## கடத்தப்பட்ட இளம்பெண்ணை ஒப்படைக்க ஐகோர்ட் உத்தரவு

சென்னை, செப் 23— மராட்டிய மாநிலம்புனேவில் இருந்துசென்னைக்கு கடத்தப்பட்ட இளம் பெண்ணை அவருடைய பெற்றோரிடமே ஒப்படைக்க வேண்டும் என்று சென்னை உயர் நீதிமன்றம் உத்தரவிட்டது.

மராட்டிய மாநிலம் புனேவைச சேர்ந்தவர் சுரேஷ்வாடிவார். அவரது மகள் அர்ச்சனா (வயது 14) ஒரு பள்ளியில் படித்து வந்தார், பார்ப்பதற்கு அழகாக இருந்த அர்ச்சனாவை இரண்டு ஆசாமிகள் தந்திரமாகப் பேசி கடத்தி வந்தார்கள். உன்னுடைய தாயார் ரெயில்வே நிலையத்தில் இருக்கிறார். உன்னை கூப்பிட்டு அனுப்பினார் என்று அந்த கடத்தல் ஆசாமிகள் அர்ச்சனாவிடம் பொய்சொல்லி அழைத்து வந்ததாகக் கூறப்படுகிறது

அர்ச்சனாவிடம் இருந்த தங்க மூக்குத்தி ஒரு சிறிய தங்கசங்கிலி ஆகியவற்றை ஆசாமிகள் இருவரும் பறித்துக் கொண்டதாகக் கூறப்படுகிறது.

பூனேவிலிருந் ரெயிலில் அந்த பெண்ணை ஏற்றிக் கொண்டு சென்னைக்கு வர ஏற்பாடு ஆயிற்று சென்னைக்கு வந்துகொண்டிருந்த ரெயில் காட்பாடியில் நின்றபோது அந்த ஆசாமிகள் தூங்கிக்கொண்டிருந்தார்கள்.

இதைப்பயன் படுத்தி அர்ச்சனா ரெயில் பெட்டியை விட்டு கீழே இறங்கி தப்பி ஓடினாள்.

வேலூரில் இந்திரா மோசஸ்என்பவர் அவருக்கு அடைக்கலம் கொடுத்தார் தன்னுடைய அனாதை இல்லத்தில்வைத்துஅவரை காப்பாற்றினார்.

அனாதைப் பெண்களை அரசாங்க உத்தரவு இல்லாமல் பாதுகாப்புஇல்லத்தில் வைத்திருப்பது முறையற்றது என்று வேலூர் சமூக சேவா நிலையம் புகார் அனுப்பியது

இதைத் தொடர்ந்து தமிழ்நாடு சட்ட உதவி கழகம் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்குத்தொடர்ந்தது. வழக்கை விசாரணை செய்த நீதிபதிகள் ரத்னவேலு பாண்டியன் அன்னுசாமி ஆகியோர் இளம் பெண் அர்ச்சனாவை பூனாவில் உள்ள அவளது பெற்றோரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று உத்தரவிட்டது

அர்ச்சனாவும இன்று ஐகோர்ட்டில் ஆஜர்படுத்தப்பட்டார்.

ஐகோர்ட் உத்தரவைத் தொடர்ந்து போலீஸ் கமிஷனர் தேவாரம், இளம்பெண் அர்ச்சனாவை பூனேவுக்கு அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தார். அதன்படி சென்னை பெண் போலீஸ் தலைமைக் காவலர் மற்றும பெண் போலீஸ்காரர்கள் 2 பேர் அர்ச்சனாவை சென்னையில் இருந்து பூனேவிற்கு அழைத்துச் செல்கிறார்கள்.

வேலூர் அனாதை இல்லம் முதல்வர் இந்திரா மோசஸ் சேவையையும் நீதிபதிகள் பாராட்டினார்கள். கடத்தல்காரர்களை தேடிப் பிடிப்பதில் போலீசார் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

## ராஜலட்சுமி கைதாகவில்லை கமிஷனர் தேவாரம் பேட்டி

சென்னை, செப். 23— சென்னையில் பரபரப்பு ஏற்படுத்திய கொள்ளைக்காரி ராஜலட்சுமி இன்னும் கைது செய்யப்படவில்லை என்று போலீஸ் கமிஷனர் தேவாரம் கூறினார்.

சென்னையில் பல கொள்ளைச் சம்பவங்களில ஈடுபட்டு பலலட்ச ரூபாயை கொள்ளை அடித்த ராஜலட்சுமி என்ற பெண்ணை போலீசார் தேடி வருகின்றனர்.

இதற்கிடையில் ராஜலட்சுமி கைதுசெய்யப்பட்டுள்ளதாக சில பத்திரிகைகளில் செய்திகள் வந்தன.

இது குறித்து கமிஷனர் தேவாரம் கூறுகையில் ராஜலட்சுமி இன்னும் கைதாகவில்லை என்றும் ராஜலட்சுமி போன்ற உருவ அமைப்புதோற்றம் கொண்ட எட்டு பேரை பிடித்து போலீசார் விசாரித்து வருவதாகவும் தெரிவித்தார்.

இந்தக் கொள்ளையில் 2பெண்கள் சம்பந்தப்பட்டிருக்கலாம என்று தான் நம்புவதாகவும் கமிஷனர் தேவாரம் கூறினார்.

போலீசார் விசாரணையில் சரோஜினி என்பவரது கைரேகை, ராஜலட்சுமி கைரேகையை ஒத்திருந்ததாகவும் தெரியவந்தது.

ஏற்கனவே பல குற்றங்களுக்காக அவர் சிறை சென்றவர் என்றும் அவரையும் போலீசார் தேடி வருவதாகவும்கூறினார்.

ராஜலட்சுமியை பிடிக்க போலீசார் தவிர முயற்சி மேற்கொண்டுள்ளதாகவும் தேவாரம் கூறினார்.

## ஏல விளம்பரம்

1. B Bhawarlal jain. 562, Poonamallee high road, Arumbakkam Madras 16, (1-8-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 18-9-86 அன்று காலை 10 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று காலை 10 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 2. A. Bhawarlal, 98-A Marker street Perambur, Madras-11 (1-1-84 முதல் 30-12-84 வரை) ஏலத்தேதி 18-9-86 அன்று மதியம் 2 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று மதியம் 2 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 3. Uthamchand jain. 19, Muniappa Mudali street old washermenpet Madras-21 ஏலத்தேதி 18-9-86 அன்று காலை 10 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று காலை 10 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 4. Nemichand Samdariya 212, E. H. road Solan nagar, Madras-39 (1-11-83 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 3-10-86 அன்று காலை 10 மணிக்கு 5. S Premabai, 29/6, Papermills road. Peravellore, Madras-82 (1-7-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 3-10-86 அன்று மதியம் 12 மணிக்கு 6. Bhikaram Puranmal, 102 Gangaiamman koil street, North Vadapalani, Madras-26 (1-5-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 3-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 7. M Pukhraj 30 Edward park street, Kospet. Madras-12 (1-7-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 6-10-86 அன்று காலை 11 மணிக்கு 8. K. Ajraj jain 2, Subbanaidu street, Choolai Madras-112 (1-7-82 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 6-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 9. L Mohanlal jain. 54, N. M. K. Mastry street, Ayanavaram Madras-23 (1-6-84 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 8-10-86 அன்று மதியம் 12 மணிக்கு 10. V. Parasmal Sowcar 1, South Mada street. Konnur, Villivakkam Madras-49 (1-1-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 9-10-86 அன்று காலை 11 மணிக்கு 11. K. Gulabchand jain 38. L. B. Road Adyar, Madras-20 (1-8-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 9-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 12. B. Bhikamchand, 60, P. M. Road, Perambur, Madras-11 (1-7-84 முதல் 30-6-85 வரை) ஏலத்தேதி 10-10-86 அன்று 1 மணிக்கு 13. Mangalchand & Co., A. P. road, Choolai Madras-112 (1-7-84 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 9-10-86 அன்று மதியம் 1 மணிக்கு 14. S. Nirmal Kumar Lalwani 36, Vanniar street Choolaimedu, Madras-94 (1-10-84 முதல் 30-3-85 வரை) ஏலத்தேதி 13-10-86 அன்று மதியம் 12 மணிக்கு 15. Babulal j5in 48/1 Subbarayachetty ath street Nammalwarpet, Madras-12 (1-12-83 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 13-10-86 அன்று மதியம் 1 மணிக்கு 16. Kamala Bai, & Co. 1053, Esat Railway Gate Kolathur main road Madras-99 (1-7-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 14-10-86 அன்று காலை 11 மணிக்கு 17. K. Dhaglaram, 72 P N K Garden 6th street Madras-4 (1-9-84 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 15-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 18. Dhagalaram Choudhary, 127, Dr. Besant road Madras-14 (1-6-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 16-10-86 அன்று மதியம் 12 மணிக்கு 19. Kanta Kavar, 22. mettu street. Ayanavaram Madras-23 (1-9-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 16-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 20 K. Rajesh Kumar. 36 Vanniar street. Choolaimedu, Madras-94 (1-7 84 முதல் 30-6-85 வரை) ஏலத்தேதி 17-10-86 அன்று காலை 10 மணிக்கு 21. R. Uttamchand jain 34. East mada street, Villivakkam Madras-49 (1-2-84 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 17-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 22. Ratanchand jain 17 c T.V Nagar Madras 40 (1-1-85 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 20-10-86 அன்று காலை 11 மணிக்கு 23. H. Jagadish Prasad Bohra. 318 P. H. Road Aminjikarai madras-29 (1-5-82 முதல் 30-9-85 வரை) ஏலத்தேதி 21-10-86 அன்று காலை 11 மணிக்கு 24. m. Hastimal jain 38, Village road Nungampakkam madras-34 (1-8-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 27-10-86 அன்று காலை 10 மணிக்கு

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த் துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரம்சந்த் ஜெயின் நெ. 150, சச்சிதானந்தம் தெரு சென்னை-12ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட தேதியில் ஏலம் விடுவார்.

# தென் திருப்பேரை கொள்ளை: முக்கியபுள்ளி கைது-நகைகள் மீட்பு

சென்னை, செப். 23—

தென் திருப்பேரை கொள்ளை சம்பவத்தில் முக்கிய புள்ளி ஒருவர் சிக்கியுள்ளார். நகைகளும் மீட்கப் பட்டுள்ளன.

தமிழகத்தில் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்திய தென் திருப்பேரை கொள்ளையின் முக்கியபுள்ளியான சாலமன் என்பவரை போலீசார் கைது செய்துள்ளனர்.

சாலமன் கொடுத்த தகவலின் பேரில் களவு போன கோவில நகைகளில் ஒரு பகுதியையும் வெள்ளிப் பாத்திரங்களும் கைப்பற்றப்பட்டன. இந்த கோவில் கொள்ளை வழக்கில் வெற்றிகரமாக துப்புத் துலக்கியுள்ளோம் என்று குற்றப்புலனாய்வு போலீசார் தெரிவித்தனர்.

நெல்லை மாவட்டம் ஆழ்வார் திருநகரி போலீஸ் சரகத்திலுள்ள தென் திருப்பேரை ஆலயத்தில் இந்த ஆண்டு ஜூலை 28ந் தேதி கொள்ளை நடைபெற்றது இடைத் தேர்தலில் கூட இதைப்பற்றி மேடைகளில் பேசினார்,

இந்த கொள்ளை பற்றி மாநில குற்றப்புலனாய்வு போலீசார் புலனாய்வு பொறுப்பை மேற்கொண்டனர். இன்ஸ்பெக்டர் ஜெனரல் ராஜசேகரன் நாயர் நேரில் சென்று புலன் விசாரணை பணிகளை முடுக்கி விட்டதையடுத்து கொள்ளைக் கும்பல பயன்படுத்திய ஆயுதங்களை போலீசார் கைப்பற்றினர்.

### எட்டுபேர் கோஷ்டி

எட்டுப்பேர் கொண்ட ஒரு கொள்ளை கோஷ்டி தான் தென் திருப்பேரை கோவில் கொள்ளையில் சம்பந்தப்பட்டிருப்பது தெரிய வந்தது. இந்தக் கோஷ்டியின் மூளையாக என்று கருதப்படும் சாலமன் என்பவரை போலீசார் கைது செய்தனர். அவர் கொடுத்த தகவலின் பேரில் கொள்ளை அடிக்கப்பட்ட நகைகளில் ஒரு பகுதியும் வெள்ளிப் பாத்திரங்களும் கைப்பற்றப்பட்டன.

சாலமனை திருநெல்வேலி முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஆஜர் படுத்தினர். அவரை 15 நாள் காவலில் வைக்க மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார்.

### பரம்பரை கொள்ளையர்

தென் திருப்பேரை கொள்ளை சம்பவத்தில் ஈடுபட்டவர்கள் கோவிலில் கொள்ளை அடிப்பதை பரம்பரைத் தொழிலாக கொண்டுள்ளவர்களாம். நெல்லை மாவட்டத்தில் நடைபெற்ற பல கொள்ளைகளில் இவர்கள் சம்பந்தப்பட்டவர்கள் என்று தெரிகிறது. மற்ற குற்றவாளிகளும் விரைவில் சிக்குவார்கள் என தெரிகிறது.

# மாஸ்கோ அருகே விமானக்கடத்தல்காரர் 2 பேர் சுட்டுக்கொலை

மாஸ்கோ, செப். 23—

மாஸ்கோ அருகே விமானம் ஒன்றை கடத்த முயன்ற 2 பேர்களை ரஷ்ய கமாண்டோக்கள் சுட்டுக்கொன்றார்கள்.

சோவியத் ரஷ்யாவைச் சேர்ந்த விமானம் ஒன்றை ரஷ்யாவைச் சேர்ந்த 2 பேர் கடத்த முயன்றனர். என். ஆர். மாலட்சேவ் மற்றும் எஸ். எப். யக்மூர்ஷி ஆகிய 2 பேரும் போதைப்பொருள் குடிப்பழக்கத்துக்கு அடிமையானவர்கள் என்று கூறப்படுகிறது.

முன்னதாக இவர்கள் ஒரு டாக்சியை தடுத்து நிறுத்தி அதில் ஏறிக் கொண்டார்கள். அவர்களை எதிர்த்த 2 போலீஸ் அதிகாரிகளையும் சுட்டுக் கொன்றார்கள்.

விமான நிலையத்துக்கு சென்ற அந்த பேருக் மாஸ்கோ அருகே விமான நிலையத்தில் இருந்த புறப்பட இருந்த விமானம் ஒன்றில் பலாத்காரமாக ஏறிக் கொண்டார்கள்.

அந்த விமானத்தில் 76 பயணிகள் இருந்தனர்.

விமான ஓட்டியை அவர்கள் மிரட்டினார்கள். இந்தத் தகவலை அறிந்த பாதுகாப்புத் துறையினர் துரிதமாக செயல்பட்டார்கள்.

பாதுகாப்புத்துறை அதிரடிப்படையினர் விமானத்திற்குள் சென்று கடத்தல்காரர்களை மிக லாவகமாக சுட்டுக் கொன்றார்கள்.

கடத்தல் காரர்களின் முயற்சி முறியடிக்கப்பட்டது.

# கணவனுக்கு எதிராக மனைவியின் வினோத உண்ணாவிரத போர்

புவனேஸ்வர். செப். 23—

தான் மணந்த கணவனிடம் தனது இல்லற உரிமை காக்கப்பட ஒரு பெண் உண்ணாவிரதம் இருக்கிறார்.

இந்த உண்ணாவிரதம் பற்றிய விவரம் வருமாறு:-

அந்த இளம் பெண்ணின் பெயர் மீராபோஸ் இவர் ஒருவரை திருமணம்செய்து கொண்டார்,

இவரை மணந்த அந்த நபர் தான் ஒரு பிரமச்சாரி என்று சொல்லி மீரா போசை மணந்தாராம்.

ஆனால் அவர் ஏற்கனவே திருமணம் ஆனவர் என்று பிறகு தெரிய வந்துள்ளது. இவரை ஏமாற்றி மணந்த கணவரது வீட்டு முன் இவர் உண்ணாவிரதம் இருக்கிறார்.

கட்டாக் மாவட்டத்தில் அவரது வீடு இருக்கிறது: பூரி ஜெகந்நாதர் ஆலயத்தில் இவர்களது திருமணம் நடந்ததாம்.

4-வது நாளாக தொடர்ந்து உண்ணாவிரதம் இருக்கிறார்

இதுகுறித்து அப்பெண் கூறியதாவது:-

### கணவன் கடத்தல்

பூரி ஜெகந்நாதர் முன்பு தான் ஒரு பிரம்மசாரி என்று உறுதிகூறி என்னை மணந்தார். இருவரும் ஒருவீட்டில் வசித்து வந்தோம். இதற்கிடையில் எனது கணவரிடம் தந்தையும் மற்றும் சில உறவினர்களும் தனது கணவரது மூத்த மனைவி அவரது 3 குழந்தைகளுடன் வந்து என்னை கண்டபடி தரம் தாழ்ந்து திட்டினார்கள்.

பிறகு எனது கணவரை கடத்திச் சென்றுவிட்டனர். இதனால் வேறுவழியில்லாமல் நான் உண்ணாவிரதம் இருப்பதாக மீராபோஸ் போலீசாரிடம் கூறினார்.

உண்ணாவிரதம் இருக்கும் முன்பு தனது கணவர் குடும்பத்தினரால் தாக்கப்பட்டதாகவும் அவர் கூறினார்,

என்னுடைய இல்லற உரிமைகளைக் காத்துக் கொள்ள என் கணவரது வீட்டு வாயில் தவிர வேறு இடம் இல்லை ஆகவே தொடர்ந்து உண்ணாவிரதம் இருக்கிறேன் என்றார் அந்த அபலைப் பெண்.

### மதுரையில் பால் விலை குறைப்பு

மதுரை, செப். 23—

மதுரை நகருக்கு வரும் பால் சப்ளையில் குறைவு ஏற்பட்டுள்ளதால் கொழுப்பு சத்து 3 சதவீதமும் இதர சத்துக்கள் 8.5 சதவீதமும் உள்ள டோஸ்ட் மில்க் சப்ளை செய்யப்படுகிறது. இதற்காக பாலுக்கு லிட்டர் ஒன்றுக்கு பத்து பைசா குறைக்கப் பட்டுள்ளது. எனவே பால் அட்டை வாங்கியவர்கள் மீதிப் பணத்தை நவம்பர் மாத கார்டு வாங்கும்போது பழையகார்டை கொடுத்து ஈடு செய்து கொள்ளலாம் என பால்வள தலைவர் நவநீத கிருஷ்ணன் கூறியுள்ளார்.

### அண்ணா பிறந்த நாள்

சென்னை, செப். 23—

சென்னை சேப்பாக்கம் 90-வது வட்டங்களை சார்பாக வரும் 26-ந் தேதி அண்ணா பிறந்தநாள் விழா கூட்டம் நடைபெறுகிறது. பார்த்தசாரதி நாயுடு தெருவில் நடைபெறும் இந்தக்கூட்டத்திற்கு வட்டச்செயலாளர் சம்பத் தலைமைவகிக்கிறார்.

விட்டுவசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன், வி. பாஜ்குமார். அன்புத்தம்பி. எஸ்.எம்.ஏ. ஜலீல். டி.ஜி.பாலன் உள்ளிட்ட பலர் பங்கேற்றுபேசுகின்றனர். பல்லவன் சீனிவாசன் குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

### பூங்கா நகரில் கழகத் தொடர் கூட்டங்கள்

சென்னை, செப். 23—

சென்னை பூங்கா நகர் பகுதியின் பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா தொடர் கூட்டங்களை செயலாளர் ஜெ. குமார் ஏற்பாடு செய்துள்ளார்,

26ந் தேதி 61வது வட்டம் கூவை சட்டண்ணமாயக்கன் தெருவில் ஜெயராமன் தலைமையில் கரிகோல் ராஜ் நாடகம்.

27ந்தேதி 54வது வட்டம் ராசப்ப செட்டித்தெருவில் பி.கே. கேசவன் தலைமையில் தங்கராசு கலை நிகழ்ச்சி

28-ந்தேதி 56 வது வட்டம் அண்ணா பிள்ளை தெருவில் செல்வராஜ் தலைமையில் சத்தியகலா நாடகம்,

29ந்தேதி 59 வது வட்டம் மோதிலால் நேரு தெருவில் ஜெயராமன தலைமையில் பட்ட நடராசன் கலைநிகழ்ச்சி

30ந்தேதி 57வது வட்டம் சுந்தரம்பிள்ளை தெருவில் சி ஜி ராதாகிருஷ்ணன் தலைமையில் குடந்தை புஷ்பா கலைநிகழ்ச்சி

அக்டோபர் 1ந் தேதி 62 வதுவட்டம் எல்லம்மன கோவில் அருகில் ராஜி தலைமையில் மணிசாமி கலை நிகழ்ச்சி.

2-ந்தேதி 60வது வட்டம் பழைய ஆட்டு தொட்டி தெருவில் ரங்கன் தலைமையில் ஈஸ்வரன்-ஈஸ்வரி கலை நிகழ்ச்சி.

3-ந்தேதி 58வது வட்டம் பாடிசன்புரத்தில் மகிழன் பன் தலைமையில் பல்லவன் சினிவாசன் கலைநிகழ்ச்சி

4-ந் தேதி 60வது வட்டம் கே. பி. பார்க்கில் செல்லப்பன் தலைமையில் திருவை அண்ணாமலை நாடகம்.

5-ந் தேதி 59 வது வட்டம் கார்ப்பரேஷன் லைனில் ஜெயராமன் தலைமையில் நெல்லை கலையரசன் கலைநிகழ்ச்சி.

6-ந் தேதி 61-வது வட்டம் டி. கே, முதலிதெருவில் ஜெயராமன் தலைமையில நவரசம் ஜி. கே, எஸ். கலை நிகழ்ச்சி.

7-ந் தேதி 60 வது வட்டம் தட்டான் குளத்தில் காஞ்சி முனுசாமி தலைமையில் ஐசரிவேலன் நாடகம்.

8ந் தேதி 58வது வட்டம் போலு நாயக்கன் தெருவில் மகிழன்பன் தலைமையில் சீனிவாசன் கலை நிகழ்ச்சி

9ந் தேதி 62வது வட்டம் சாமி பிள்ளை தெருவில் ராஜி தலைமையில் டி.எம். ஜானி கலை நிகழ்ச்சி.

### காஷ்மீரில் 50 போ கைது

ஸ்ரீநகர், செப். 23—

காஷ்மீர் மாநிலத்தில் தற்காப்பு நடவடிக்கையாக 50 போ கைது செய்யப்பட்டுள்ளனர்

பாண்டி பகுதியில் 141 கடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது,

### வெள்ளைச்சாமி தந்தை காலமானார்

கோவை. செப், 23—

கழக முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் ஆ. வெள்ளைச்சாமியின் தந்தை கே. ஆறுமுகம் செட்டியார் நேற்று பகல் 1.45 மணிக்கு உடுமலைப் பேட்டை அருகேயுள்ள மடத்துக்குளம் என்ற ஊரில் காலமானார். அவருக்கு வயது 68.

ஆ. வெள்ளைச்சாமி, ஒன்றிய செயலாளர் எம். ஏ, சுப்பிரமணியம் ஆகியோரின் தந்தையான ஆறுமுகம் செட்டியாரின இறுதிச்சடங்கு இன்று அமராவதி ஆற்றங்கரையில் நடைபெறுகிறது.

# ஆண்டிபட்டி தொகுதி கதர் நூற்பாலைகள்: நா. காமராசன் தகவல்

மதுரை, செப் 23—

மதுரை மாவட்டம் ஆண்டிபட்டி தொகுதியில் ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெற கதர் கிராம தொழில்வாரியம் பல தொழில்களை துவங்க உள்ளதாக வாரிய துணை தலைவர் கவிஞர் நா. காமராசன் கூறினார்.

மதுரையில் நா. காமராசன் நிருபர்களிடம் கூறியதாவது:-

ஆண்டிபட்டி தொகுதியில் ரெங்க சமுத்திரம் அடைக்கலப்பட்டி, ஆத்தங்கரைப்பட்டி ஆகிய இடங்களில் கிராமிய நூற்பு ஆலைகள் துவங்கப்பட உள்ளன. ஒவ்வொரு ஆலையும் ரூபாய் 3.25 லட்சத்தில் அமையும் ஒவ்வொன்றிலும் 30 பேர் வேலை பெறுவார்கள்.

இது தவிர கொட்டார் நாத்தில செங்கல் தொழிற்சாலை ரூபாய் 11.5 லட்சத்திலும் கண்டமனூரில் மெழுகுவர்த்தி தொழிற்சாலை ரூபாய் 1.09 இலட்சத்திலும் பிளாஸ்டிக் பாப்பின்கள் மற்றும் பேப்பர் கோன்கள் அலுமினிய நாற்காலி மேசை தயாரிக்கும் தொழிற்சாலை ஆகியவை மொத்தம் 17 79 லட்சத்திலும் அமைக்கப்படும்,

இது தவிர கொண்டம நாயக்கன் பட்டியில் நேபாளி சுறி அலகு தொழிற்சாலை ரூபாய் 9 லட்சத்திலும், கன்னியப்பிள்ளை பட்டியில ரூபாய் 1 லட்சத்தில கம்பள நெசவு தொழிற்சாலையும் வடுகபட்டி வட்டாரத்தில் ரூபாய் 5.75 லட்சத்தில் கிராமிய நூற்பு ஆலையும், அமைக்கபபட உள்ளது.

### நல்ல பல திட்டங்கள்

மண்டாண்ட கூட்டுறவு சங்கம் ஆரம்பித்து 50 நபர்களுக்கு வேலை வாய்ப்பும் தச்சு மற்றும் கொல்லு கூட்டுறவு சங்கம் ஆரம்பித்து 40 நபர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டு உள்ளது.

இவை அனைத்தும் ஆண்டிப்பட்டி தொகுதியில் நடைபெற்று வரும் திட்டங்கள் ஆகும்.

போடி தொகுதியில் மீனாட்சி புரத்தில் கதர் கிராமத்தொழில் வாரியத்தின் மூலம் 12 லட்சத்து 25 ஆயிரம் ரூபாய் செலவில் கைக்குத்தல் அரிசி, ரொட்டி தயாரித்தல் மண்பாண்ட தொழிற்சாலை, கிராமிய நூற்பு நிலையம் முதலியவை ஆரம்பிக்கப்பட உள்ளன.

மதுரை மாவட்டத்தில் 85-86ம் ஆண்டில் ரூபாய் 64 லட்சத்துக்கு கதர் துணிகள் விற்பனையாகி உள்ளன இந்த ஆண்டு ரூபாய் 88 லட்சத்துக்கு விற்பனை செய்ய நிர்ணயித்து உள்ளோம் தமிழகம் முழுவதும் ரூபாய் 15 கோடிக்கு இந்த ஆண்டு கதர் துணி விற்க முடிவுசெய்து உள்ளோம். கதர் பாலியெஸ்டர் வேட்டி சட்டை துணிகள் அறிமுகப்படுத்தி உள்ளோம எங்களது விற்பனை கூடம் அண்டை மாநிலத்தில் பெங்களூரில் ஏற்கனவே திறக்கப்பட்டு செயல் படுத்தப்பட்டு வருகிறது. புதிதாக பம்பாய், டெல்லி போன்ற நகரங்களில்



திறக்க பரிசீலனை செய்து வருகின்றோம்.

மதுரை மேலமாசி வீதியில் உள்ள கதர் கிராம தொழில்வாரிய கட்டிடம காந்தியின் நினைவாக நினைவுசின்னம் ஆக்கப்படும். காந்தியடிகள் மதுரை வந்த போது மேலமாசி வீதியில் உள்ள இந்தக் கட்டிடத்தில் அரை ஆடை அணிய தொடங்கினார் அதன் நினைவாக அந்த கட்டிடம் நினைவு சின்னமாக மாற்றப்படும், எங்களது காட்சிகூடம் மாடிப் பகுதியில் அமைக்கப்படும்.

இவ்வாறு நா. காமராசன் கூறினார்.

# தமிழ் மணக்கும் மண்ணாகவே தமிழகம் இருக்கும்

## அமைச்சர் ராசாராம் பேச்சு

மதுரை. செப். 23—

புரட்சித்தலைவர் மீது நம்பிக்கை வையுங்கள் தயவு செய்து இந்தி போராட்டத்தை கைவிடுங்கள். தமிழ் மணக்கும் மண்ணாக தமிழகம் என்றும் இருக்கும் என்று தொழில் அமைச்சர் ராசாராம் கூறினார்,

மதுரையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் கலந்து கொண்டு தொழில் துறை அமைச்சர் ராசாராம் பேசியதாவது:-

விஞ்ஞான அறிவைபெறுவதற்கு ஆங்கிலமும் தாய்மொழி தமிழும் ஆட்சி மொழி என்பதுதான் அண்ணாவின் கொள்கை. இந்தி பேசாத மக்கள் விரும்புகிற வரை ஆங்கிலம் நீடிக்கும் என்று நேரு உறுதி மொழி கொடுத்துள்ளார்.

டில்லியில் பெரியாரின் பிறந்த நாள் விழாவில பேசிய ஜனாதிபதி ஜைல் சிங் சாதிகள் ஒழியவும், சமதாம சமுதாயம் அமையவும் பெரியார் கண்ட கனவுகள் நிறைவேற வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கின்றார்.

ஆனால் இங்குள்ள திராவிட கழகத்தினர் ஏன் கருணாநிதியின் பின்னால் ஓடிக்கொண்டு இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ள முடியவில்லை.

கழகத்திற்கு காங்கிரஸ் கட்சிக்கும் நல்ல உறவு இருந்து வருகிறது இதை எப்படியாவது அறுத்து விட முடியாதா என்பதற்கு ஏதையாவது சிலர் பேசுவார்கள்.

மத்திய அரசு இந்தியை திணிக்கப்பார்ப்பதாக ஒரு வார்த்தை கிளப்பியுள்ளார்கள் ராஜீவ் காந்தியை கேவலமாக பேசுகின்றார்கள்.

மிகப்பெரிய ஜனநாயகவாதி நேருவின் பேரப்பிள்ளை ஜிம்பாவே நாட்டில் பல நாட்டு தலைவர்கள மத்தியில் ஜனநாயகத்தை என்றென்றும் கட்டிக் காப்போம் என்று சூளுரைத்திருக்கிறார்.

ராஜீவ் காந்தியின் மொழி இந்தியல்ல. அவரது துணைவியாரின் மொழியும் இத்தாலிதானே தவிர இந்தியல்ல

### போராட்டம் வேண்டாம்

எந்த சூழ்நிலையிலும் எந்த கட்டாயத்திலும் ராஜீவ் கட்டாய இந்தியை கொண்டுவர மாட்டார் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை நமக்கு உண்டு அவர் உரையாடுவது அளவளவுவது அத்தனையும் ஆங்கிலத்தில் தான்.

புரட்சித்தலைவர் இப்போது சிகிச்சைக்காக அமெரிக்கா சென்றிருக்கிறார் வரும் போது டில்லி சென்று மொழிப் பிரச்சினை குறித்து ராஜீவ்காந்தியை சந்தித்து பேசி பரிகாரம் காண்பார். ராஜீவ்காந்தி மீதும் எல்லாவற்றையும் விட புரட்சி தலைவர் மீது அதிக நம்பிக்கை வைத்து மாணவர்களே தயவு செய்து போராட்டத்தை கைவிடுங்கள்

புரட்சித்தலைவரை நம்பியாரும் கெட்டதில்லை தன்னை நம்பியவர்களை கை விட்டதாக வரலாறே கிடையாது.

இந்த மண்ணை நம்முடைய மண்ணாக தமிழ் மணக்கின்ற மண்ணாக என்றைக்கும் வைத்திருப்போம்,

இவ்வாறு அமைச்சர் ராசாராம் பேசினார்.

கூட்டத்துக்கு செல்வம் தலைமை தாங்கினார். கூட்டத்தில் தொழில் முதலீட்டு கழக த்தலைவர் எஸ். ஆர். ராதா. தமிழ்நாடு பால் வள தலைவர் கலைமணி. கதர் கிராம வாரிய துணைத் தலைவர் கவிஞர் காமராசன் காராளன பி வி சங்கர கிருபானந்தம், வேலம்பாள் லோகநாதன், பெருமாள் ராமணன் மற்றும் பலர் பேசினார்கள் ஐசரிவேலன் குழுவினரின் இராப இராஜ்யம் நாடகம் நடைபெற்றது.

# சென்னை பல்கலைக் கழகத்திற்கு 500 ஏக்கரில் கட்டிடங்கள்

சென்னை, செப். 23—

சென்னை பல்கலைக்கழகத்திற்கு 500 ஏக்கரில் புதிய வளாகம் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது என்று இதன் துணை வேந்தர் டாக்டர் பி. சுந்தரேசன் கூறினார்.

சென்னை பல்கலைக் கழக சிண்டிகேட் கூட்டம் நடந்தது.

அந்தக் கூட்டத்தில் இது பற்றிய திட்டம் தீட்டப்பட்டது.

சென்னை பல்கலைக் கழகத்திற்கு சென்னை நகருக்கு வெளியே 500 ஏக்கரில் எல்லா வசதியுடன் கூடிய வளாகம் கட்டத் திட்டமிடப்பட்டது.

தாம்பரம் அல்லது மாமல்லபுரம் அல்லது பூவிருந்தவல்லி அருகே 500 ஏக்கர் நிலம் ஒதுக்கித்தரும்படி அரசிடம கேட்டுள்ளது.

இதற்கு மாஸ்டர் பிளான் தயாரிக்க ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது என்றும் சுந்தரேசன் கூறினார்.

இப்போது சென்னை பல்கலைக்கழகம் மெரினா கடற்கரையில் உள்ளது

புதிய பிரிவுகள் அமைக்க இட வசதி இல்லாத நிலை இருக்கிறது.

அதையொட்டி புதிய வளாகம் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது என்று அவர் கூறினார்.

### மேட்டூர் நீர்மட்டம்

திருச்சி. செப். 23—

மேட்டூர் அணையின் நீர் மட்டம் நேற்று மாலை 73 அடியாக இருந்தது.

அணைக்கு வினாடிக்கு 8 ஆயிரத்து 93 கன அடி தண்ணீர் வந்து சேருகிறது அணையில் இருந்து 19 ஆயிரம் கன அடி தண்ணீர் விடப்படுகிறது.

# குடும்ப கட்டுப்பாடு திட்டம்: தமிழகத்திற்கு 2½ கோடி முதல்பரிசு

புதுடெல்லி, செப். 23-

குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை சிறப்பாக அமல் நடத்தியதற்காக தமிழ் நாட்டுக்கு முதல் பரிசாக மத்திய அரசு இரண்டரை கோடி ரூபாய் வழங்கியது. அமைச்சர் அண்டே இந்த பரிசை பெற்றுக் கொண்டார்.

அனைத்து இந்திய சுகாதார அமைச்சர்கள் மாநாடு டெல்லியில் தொடங்கியது.

இந்த மாநாட்டில் இந்தியாவில் கடந்த 1984 85 ம் ஆண்டில் குடும்ப நல திட்டத்தின் கீழ் கருத்தடை திட்டத்தை சிறப்பாக அமல் நடத்திய மாநிலங்களுக்கு பரிசு வழங்கப்பட்டது

தமிழ்நாட்டுக்கு முதல் பரிசு இரண்டரை கோடி ரூபாய் கிடைத்தது. இதற்கான பரிசுத் தொகையை மத்திய அமைச்சர் நரசிம்மராவ். மாநாட்டில் தமிழக அமைச்சர் டாக்டர் அண்டேயிடம் வழங்கினார். அத்துடன் நினைவுப் பரிசையும் வழங்கினார்.

இதேபோல அசாம், பஞ்சாப மாநிலங்களுக்கும் தனித்தனியே முதல் பரிசாக இரண்டரை கோடிரூபாய் வழங்கப்பட்டது.

2-வது பரிசான தலா ஒருகோடிரூபாய் அரியானா கர்நாடகா ஆகிய மாநிலங்களுக்கு கிடைத்தது.

# மக்கள் குறையை விரைவில் தீர்க்க புதிய திட்டம்

## திட்டப்பணிகள் பற்றி கம்ப்யூட்டர் மூலம் ஆய்வு

**சென்னை, செப். 23. மக்கள் குறைகளை விரைவில் தீர்க்கவும், வளர்ச்சிப் பணிகளை விரைவுபடுத்தவும் தலைமைச் செயலகத்தில் புதிய நடைமுறை அமல் படுத்தப்படுகிறது.**

தமிழக அரசு தலைமைச் செயலாளர் பத்மநாபன் நிருபர்களிடம் கூறியதாவது:-

தலைமை செயலகத்தில் மூன்று புதிய நடைமுறைகளைக் கொண்டு வந்துள்ளேன். அதன்படி வேலைகள் துரிதமாக முடிவதற்காக திங்கள் செவ்வாய் இரண்டு நாட்களிலும் தலைமைச் செயலக செயலாளர்களின் கூட்டங்கள் எதுவும் நடத்தக்கூடாது. வேலைகளை பார்த்து விரைவாக முடிக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறேன்.

ஒரு கோடி ரூபாய்க்கு மேல உள்ள திட்டங்களின் தாமதத்திற்கு காரணம் என்ன என்று கண்டுபிடித்து அதை கம்ப்யூட்டர் இயந்திரத்தில் சோத்து ஒவ்வொரு மாதமும் அதற்கான அறிக்கைகளை கம்ப்யூட்டரில் இருந்து வாங்கி முதல்வருக்கு கொடுப்பது என்று வைத்திருக்கிறோம்.

மத்திய அரசு தொடர்புடைய திட்டங்கள் பற்றி மிகுந்த கவனத்துடன் கண்காணித்து அவை பற்றியும் கம்ப்யூட்டர் இயந்திரத்தில் செலுத்தி தக்க முறையில் தாமதத்தை குறைக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

### சேலம் திட்டம்

நிர்வாகத்தில் சீரமைப்புக்காக 'சேலம் திட்டம்' என்று இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு திட்டம் தொடங்கப்பட்டது அதன்படி ஒருவர் ஒரு பிரச்சினைக்காக மனு கொடுத்தால் அவருக்கு ஒரு கார்டு கொடுக்கப்படும். அதில் ஒரு தேதியும் குறிப்பிட்டு இருக்கும், அந்தத் தேதியில் வந்து அவர் பார்க்க வேண்டும். அதற்கிடையில் அவர் வேறு மனு கொடுக்க வேண்டியதில்லை.

அந்தப் பிரச்சினை மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை பற்றி அந்த தேதியில் அவருக்கு தகவல் அறிவிக்கப்படும், இதன் மூலம் பல மனுக்கள் போடுவது தவிர்க்கப்படுகிறது அந்த முறையை பரவலாக கொண்டுவர உத்தேசித்திருக்கிறோம்.

தமிழ்நாட்டிலுள்ள வறட்சி நிவாரணத்திற்காக 310 கோடி ரூபாய் கேட்டு இருந்தோம்

### வற்புறுத்தல்

மத்திய நிபுணர் குழுவும் வந்து பார்த்துவிட்டுப் போய் அறிக்கையும் கொடுத்துவிட்டார்கள் அதன் மீது விரைவாக முடிவு எடுத்து பணம் அனுப்பும்படி மத்திய அரசைக் கேட்டு இருக்கிறோம்.

இதுவரை தமிழக அரசின் நிதியிலிருந்து வறட்சி பணிகளுக்காக 50 கோடி ரூபாய் செலவு செய்து இருக்கிறோம். இன்னும் பல இடங்களில் குடிதண்ணீர் இல்லை. மழை வந்தாலும் குடி தண்ணீர் கிடைக்கும் வரை இந்தப் பணிகளைச் செய்ய வேண்டி உள்ளது

ஆகவே வறட்சி நிவாரணத்திற்கான விசேஷ கமிஷனர்களை அழைத்துப் பேசினேன் மாவட்டங்களுக்கு அவர்கள் நேரில் போய் வேலைகளின் முன்னேற்றத்தை துரிதப்படுத்த சொல்லி இருக்கிறேன் இன்னும் 4 நாட்களில் மீண்டும் அவர்களைச் சந்தித்துப் பேசுவேன்.

இவ்வாறு தலைமைச் செயலாளர் ஏ.பத்மநாபன் கூறினார்.

## பெரியமேடு பகுதியில் அமைச்சர் ப. உ. ச. குறைகேட்டார்

சென்னை, செப், 23— சென்னை பெரியமேடு பகுதியில் உள்ள நடேசன் நகர் குடிசைப்பகுதி, சாமி பிள்ளை தெரு, ஆபீஸ் திரு வேங்கட முதலி தெரு ஆகிய பகுதிகளில் அமைச்சர் ப.உ.ச பார்வையிட்டு அங்குள்ள மக்களின் குறைகளைக் கேட்டறிந்தார்.

நடேசன் நகர் பகுதியில் விளக்குகள் எரியவில்லை என்று மக்கள் தெரிவித்தனர், அந்த விளக்குகளை உடனே எரிய வைக்க அதிகாரிகளுக்கு அமைச்சர் ப.உ.ச உத்தரவிட்டார். அதே போல் மழை நீர் வடிகால்களை சுத்தப்படுத்தவும் உத்தரவிட்டார்.

அமைச்சர் ப.உ.சவுடன் மாநகராட்சி ஆணையாளர் சாந்தஷீலா நாயர் குடிநீர் தலைமை பொறியாளர் தெய்வமணி. மாநகராட்சி துணை கமிஷனர் எம் சத்தியமூர்த்தி ஆகியோர் சென்றனர்.

## இந்திய-ரஷ்ய நட்புறவு: கோர்பசேவ் டிசம்பர் மாதம் டெல்லி வருகிறார்



புதுடெல்லி,செப் 23— இந்தியா - சோவியத் ரஷ்யா ஆகிய இரு நாடுகளுக்கிடையேயான நட்பு மேலும் வலுப்படுத்தப்படும் வகையில் சோவியத் தலைவர் கோர்பசேவ் இந்த ஆண்டு டிசம்பர் மாதக் கடைசியில் இந்தியா வருகிறார். பிரதமர் ராஜீவ் காந்தியை அவர் சந்தித்து பேசுவார்.

அணு ஆயுதப் போட்டியை பல்வேறு நாடுகளும் கண்டனம் செய்துள்ளன. ஆயுதக்குறைப்பு முழுமையாக அமல்படுத்தப்பட்டு உலக நாடுகளிடையே அமைதி காக்கப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டு வருகிறது.

அணு ஆயுத ஒழிப்பு பற்றி அமெரிக்க ஜனாதிபதி ரீகனும் சோவியத்தலைவர் மைக்கேல் கோர்பசேவும் சந்தித்துப்பேசி ஆலோசனை நடத்தவும் ஏற்பாடாகி இருந்தது.

ஆனால் அந்த உச்ச மாநாடு சாத்தியமாகவில்லை என்று தெரிவிக்கப்பட்டுவிட்டது

இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையேயான எல்லைத் தகராறு தீர்க்கப்படாமலே இருந்து வருகிறது. மற்றொரு பக்கம் சீனாவுக்கும் சோவியத் ரஷ்யாவுக்கும் இடையே நட்புறவு வளம் பெறவில்லை

இந்தநிலையில் சோவியத் தலைவர் மைக்கேல் கோர்பசேவ் இந்த ஆண்டு வருகிறார். வருகிற டிசம்பர் மாத வாக்கில் கோர்பசேவ் புதுடெல்லி வருவார் என்று தெரிகிறது.

### நட்புறவு வலுப்படும்

சோவியத் தலைவர் கோர்பசேவ் புதுடெல்லியில் பிரதமர் ராஜீவ் காந்தியை சந்தித்துப்பேசுவார்,

இரு நாடுகளுக்கு இடையேயான நட்புறவு இந்தச் சந்திப்பால் மேலும் வலுப்படும் என்றும் தெரிகிறது.

வளரும் நாடுகளுக்கு சோவியத் தலைவர் கோர்பசேவ் வருகை தருவது இதுவே முதல் தடவை ஆகும்,

கோர்பசேவை பிரதமர் ராஜீவ்காந்தி ஏற்கனவே 3 தடவை சந்தித்துப் பேசியிருக்கிறார், ஆனாலும் புதுடெல்லி வரும் கோர்பசேவுடன் பிரதமர் ராஜீவ் ஆலோசனை நடத்துவதன் மூலம் இந்தியா சோவியத் ரஷ்யா ஆகிய நாடுகள் பற்றிய பல்வேறு பிரச்சினைகள் ஆராயப்படும் என்றும் தெரிகிறது.

சீனாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே நடந்து வரும் எல்லைத்தகராறு பற்றிய பேச்சுவார்த்தை இன்னும்முடிந்தபாடில்லை சீனாவுடன் பேச்சுவார்த்தை நடத்துவதன் மூலம் சீனாவுடனான உறவுகளை வளர்த்துக் கொள்ள இந்தியா விரும்புகிறது என்று சொல்வதற்கில்லை.

இந்தியாவுக்கு சோவியத் ரஷ்யா உறுதுணையாக இருந்து வருகிறது.

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா ஆயுத உதவிகளை செய்து வருகிறது. போர் ஆயுதங்களை முக்கியமாக போர் விமானங்கள் வெடி குண்டுகள் ஆகியவற்றை உதவி வருகிறது. இந்த நிலை தொடருமானால் இந்தியா தனது ராணுவ பலத்தை வலுப்படுத்திக்கொள்ள சோவியத் ரஷ்யாவை நாடவேண்டி இருக்கிறது.

இந்தியாவுக்கு வருகை தரும் ரஷ்யதலைவர் கோர்பசேவும், பிரதமர் ராஜீவ் காந்தியும் சந்தித்துப் பேசுவது இரு நாடுகள் மட்டும் இன்றி உலக நாடுகள் பலவற்றில் நிலவிவரும் பல்வேறு பிரச்சினைகள் தீர வழிவகுக்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### நல்லுசாமி

செப்24 ந்தேதி 8 மணிக்கு மேலமாத்தூர் ஒன்றிய நிகழ்ச்சிகள்

9 மணி அரியலூர் நகர நிகழ்ச்சிகள்.

10 மணி: ஆண்டிமடம் செந்துறை ஒன்றிய நிகழ்ச்சிகள்.

11 மணி: திருமானூர் ஒன்றிய நிகழ்ச்சிகள்.

12 மணி புள்ளம்பாடி ஒன்றிய நிகழ்ச்சிகள்.

பிற்பகல் 1 மணி - லால்குடி ஒன்றிய நிகழ்ச்சிகள்.

மாலை 5 மணி:- மணிகண்டம் ஒன்றிய நிகழ்ச்சிகள்.

6 மணி: மணப்பாறை நகர நிகழ்ச்சிகள்

இரவு 7 மணி:- வையம்பட்டி ஒன்றிய நிகழ்ச்சிகள்

இரவு 8 மணி:- கடவூர் ஒன்றிய நிகழ்ச்சிகள்.

கிருஷ்ணராயபுரம் ஒன்றிய நிகழ்ச்சிகள்.

9 மணி: தோகமலை ஒன்றிய நிகழ்ச்சிகள்.

## வடாற்காடு மாவட்ட குடிநீர் பிரச்சினை: உக்கம்சந்த் ஆய்வு

வேலூர், செப், 23— வடாற்காடு மாவட்டத்தில் நிலவும் குடிநீர் பிரச்சினை குறித்து சட்டமன்ற உறுப்பினர்களுடன் குடிநீர் வாரியத் தலைவர் உக்கம்சந்த் ஆலோசனை நடத்தினார்.

வடாற்காடு மாவட்டத்திலுள்ள பேரணாம்பட்டு ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் குடிநீர் ஆய்வுக் கூட்டம் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ்.டி உக்கம் சந்த் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் தமிழரசன் எம்.எல்.ஏ. ஒன்றிய தலைவர் சம்பத் ஊராட்சி மன்றத் தலைவர்கள். வாரிய பொறியாளர்கள் பொது மக்கள் கலந்து கொண்டனர். குடிநீர் பிரச்சினையைத் தீர்த்து வைப்பது பற்றி ஆராயப்பட்டு பொறியாளர்களுக்கு உத்தரவிடப்பட்டது.

### மக்களுடன் ஆலோசனை

மாதனூர் ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் குடிநீர் ஆய்வு கூட்டம் தமிழ்நாடு குடிநீர் வடிகால்வாரியத் தலைவர் உக்கம் சந்த் தலைமையில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் ஏ.ஜெயமோகன் எம்.பி. செ. தமிழரசன் எம்.எல்.ஏ. ஆர். கருஷ்ணசாமி எம்.எல்.ஏ, அசூர் மஜீத் எம்.எல்.ஏ.. மாதனூர் ஊராட்சி பெருந்தலைவர் பாண்டுரங்கன் ஊராட்சித் தலைவர்கள். வாரியப் பொறியாளர்கள் மற்றும் பொது மக்கள் அனைவரும் கலந்து கொண்டனர், இக்கூட்டத்தில் குடிநீர் பிரச்சினைப் பற்றி மனுக்களைப் பெற்று பரிசீலனை செய்து குடிநீர் வசதி செய்து தருமாறு வாரியப் பொறியாளர்களுக்கு வாரியத் தலைவர் உக்கம்சந்த உத்தரவிட்டார்.

பின்னர் மாதனூர் ஊராட்சி ஒன்றியத்திலுள்ள பள்ளிக்குப்பம், முள்ளிப்பாளையம் கூட்டு குடிநீர் திட்டத்தையும் அகரம் சேரி குடிநீர்த் திட்டத்தையும் பேரணாம்பட்டு மன்ற உறுப்பினர் செ. தமிழரசன் எம்.எல்.ஏ. தலைமையில் சட்டமன்ற உறுப்பினர் ஆர். கிருஷ்ணசாமி எம்.எல்.ஏ மாதனூர் ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர் பாண்டுரங்கன் ஊராட்சி மன்ற தலைவர்கள் ஆலோசனை முன்னிலையில தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ்.டி.உக்கம்சந்த் துவக்கி வைத்தார்.

பள்ளிக்குப்பம். முள்ளிப்பாளையம் கூட்டு குடிநீர் திட்டத்தினால் பயன் பெறும் மக்கள் தொகை 1200 ஆகும். இத்திட்டத்தின் மதிப்பீடு ரூபாய் 1.97 இலட்சங்களாகும். அகரம் சேரி குடிநீர் திட்டத்தினால் பயன்பெறும் மக்கள் தொகை 1750 ஆகும். இத்திட்டத்தின் மதிப்பீடு ரூபாய் 4,59 இலட்சங்களாகும்.

## இலங்கை போராளிகள் தாக்குதல்: சிங்கள ராணுவம் ஓட்டம்

சென்னை செப். 23— மட்டக்களப்பில் சிங்கள ராணுவத்தை விடுதலைப் புலிகள் கடும் தாக்குதல் மூலம் பின்வாங்கச் செய்துள்ளனர்.

மட்டக்களப்பு மாவட்டத்தில் இராணுவத்தை முன்னேற முடியாதவாறு தமிழீழ விடுதலைப்புலிகள் கடும் தாக்குதல்களை மேற்கொண்டு வருகின்றனர்.

மட்டக்களப்பு மாவட்டத்திலுள்ள கும்புறுமூலை இராணுவ முகாமிலிருந்து வெளியேறிய இராணுவத்தினரை தமிழீழ விடுதலைப் புலிகளின் கெரில்லா அணியொன்று கிரான்தோட்டடாலம் என்னும் இடத்தில் தடுத்து நிறுத்தி கடுமையான தாக்குதலை மேற்கொண்டது. இத்தாக்குதலை எதிர்கொள்ள முடியாத இராணுவத்தினர் முகாமிற்குள் பின்வாங்கினர். இராணுவத்தினரின் உயிர்சேதம் பற்றிய விவரம் தெரியவில்லை,

இதற்கிடையில் வல்வெட்டித்துறை இராணுவ முகாமிலிருந்து வெளியேறிய இராணுவத்தினர் மீது விடுதலைப்புலிகள் கடுமையான தாக்குதலை மேற்கொண்டனர். இத்தாக்குதலுக்கு ஈடு கொடுக்க முடியாத இராணுவத்தினர் பின்வாங்கி முகாமிற்குள் முடங்கிக்கொண்டனர் இத்தாக்குதலின் போது பல ஆயுதங்கள் விடுதலைப் புலிகளால் கைப்பற்றப்பட்டன.

மேலும் முல்லைத்தீவு இராணுவ வளாகத்திலிருந்து மோட்டார் குண்டுகள், ஏவப்பட்டன. அதனைத் தொடர்ந்து ஹெலிகாப்டரிலிருந்தும் 'ராக்கெட்' தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது. இச்சம்பவத்தின் போது முதீன் வயது 53 அயாஸ்வயது, 35 சிமெ வயது 26 ஆகிய 3 அப்பாவிப் பொதுமக்கள் மாண்டனர். முகராஜ் என்பவர் படுகாயமடைந்துள்ளார். 'ராக்கெட்' தாக்குதல் மேற்கொண்ட ஹெலிகாப்டர் மீது விடுதலைப் புலிகள் பதில் தாக்குதல் மேற்கொண்ட போது ஹெலிகாப்டர் சேதத்திற்குள்ளாகி பின்வாங்கியது.

## சென்னை கிரிக்கெட் டெஸ்ட் படைத்த புதிய சாதனை

சென்னை, செப். 23- இந்திய கிரிக்கெட் வரலாற்றில் வெற்றி தோல்வி, டிரா ஆகிய மூன்றுமே இல்லாமல் சென்னை கிரிக்கெட் டெஸ்ட முடிவடைந்தது.

சென்னையில் இந்திய- ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணிகளுக்குஇடையேயான முதல் கிரிக்கெட் டெஸ்ட் சம நிலையில் முடிவடைந்தது.

ஆஸ்திரேலியா நேற்று 5 விக்கெட் இழப்பிற்கு 170 ரன்களை எடுத்திருந்த நிலையில் ஆலன்பார்டர் துணிச்சலாக டிக்ளர் செய்தார்.

இதையடுத்து 87 ஓவர்களில் 348 ரன்களை எடுத்தால் வெற்றி பெறலாம் என்ற நிலையில் இந்தியா தனது இரண்டாவது இன்னிங்சை துவக்கியது

ஸ்ரீகாந்த் 39 ரன்கள், சவாஸ்கர் 90 ரன்கள் அமர்நாத் 51 ரன்கள், அசாருதீன 42 ரன்கள் பண்டிட 39 ரன்கள் கபில்தேவ் 1 ரன் எடுத்தனர்.

கபில்தேவ் 1-ரன்னுடன் அவுட் ஆனது ரசிகர்களுக்கு பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்தது

இறுதியாக ரவி சாஸ்திரி சூழ்நிலையை உணர்ந்து அருமையாக ஆடினார்

கடைசி 6 பந்தில் முதல் பந்தில் ரன் எடுக்கப்படவில்லை.

2-வது பந்தில் 2 ரன்களும், 3-வது பந்தில் ஒரு ரனனும எடுத்து இரு அணிகளும் சம நிலையை எட்டியது.

அப்போது மூன்று பந்துகள் பாக்கியிருந்தன.

ஆனால் 2 வது பந்தில் மணீந்தர் எல்.பி. டபிள்யூ ஆனார்.

ரசிகர்களுக்குஇது ஏமாற்றமாக முடிந்தது.

இந்திய கிரிக்கெட் வரலாற்றில் வெற்றி, தோல்வி டிரா என்ற மூன்றுமே இல்லாமல் முடிவடைவது இதுவே முதல தடவையாகும்.

இதேபோல் 1961-ல் மேற்கிந்தீஸ் ஆஸ்திரேலியா இடையேயான ஆட்டத்திலும சமனில் முடிவடைந்தது

ஆஸ்திரேலிய அணியின் டீன் ஜோன்ஸும். இந்திய அணி காப்டன் கபில்தேவும் சிறந்த ஆட்டக்காரர்களாக அறிவிக்கப்பட்டனர்.

## அரியலூர் கல்லூரிமாணவர் தேர்தலில் கழகம் வெற்றி

திருச்சி, செப். 23- அரியலூர் அரசுகலைக் கல்லூரி மாணவர் பேரவைத் தேர்தலில் கழக மாணவர் பாலசுப்பிரமணியம்செயலாளராகபோட்டியிட்டு வெற்றிபெற்றார்.

அவர் அமைச்சர் அருணாசலம் தங்கராசு எம். பி, புருசோத்தமன் எம்.எல்.ஏ, ஆராமிர்தம். நாகராஜன் பி, கணேசன் ரகீம், கலைவாணன் ஆகியோரிடம் வாழ்த்துப்பெற்றார்.

## நாட் குறிப்பு

### வியாசர்பாடி

நாள்:-28,9.86. ஞாயிறு காலை 10 மணி இடம்:- வியாசர்பாடி எம்.ஜி.ஆர் நகர். தலைமை:-டி.டி.அண்முகம் முன்னிலை:-வி.எம், லோகநாதன். அன்பு, கொடிஏற்றுபவர் ஜே,சி.டி. பிரபாகரன் இனிப்பு வழங்குபவர்:-என்.வி என். செல்வம் சிறப்புரை:-சி.ஜெயபால் உதயகுமார், மயிலை சூரி, ராஜேந்திரன், மூர்த்தி மற்றும் பலர் கூட்ட ஏற்பாடு:- 22வது வட்ட எம். ஜி.ஆர் இளைஞர் அணி.

## இலவச சித்தமருத்துவ முகாம்

ராமநாதபுரம்,செப்.22— ராமநாதபுரம் மாவட்டம் திருவாடனை வட்டாட்சியர் அலுவலகத்தில் ராமநாதபுரம் கோட்ட அளவிலான மக்கள் குறை தீர்க்கும் நாள் 24-ந்தேதி (புதன்கிழமை) காலை 11.00மணியளவிலும் இராமேஸ்வரம் அரியாங்குண்டு கிராமத்தில் 27ந் தேதி(சனிக்கிழமை)காலை 11.00 மணியளவில் மக்கள் குறை தீர்க்கும் நாள் மாவட்ட ஆட்சித் தலைவர் (பொறுப்பு)டி. இராகவன் தலைமையில் நடைபெறுகிறது.

இவ்விரு கிராமங்களிலும் மாவட்ட சித்த வைத்திய தலைமை அலுவலர். ராய் சித்த வைத்திய முறையிலான இலவச மருத்துவ முகாம் நடத்தப்படும்.

இந்தஇலவச சித்த வைத்திய மருத்துவ முகாமினை நன்கு பயன்படுத்திக் கொள்ளுமாறு பொது மக்கள் கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

## காங்கிரஸ் நகர் மன்ற உறுப்பினருக்குஅரிவாள் வெட்டு: திமுக வன்முறை

நெல்லை, செப். 23 – நெல்லை நகர் மன்ற காங்கிரஸ் உறுப்பினரை தி.மு.க காலிகள் வீடு புகுந்து அரிவாளால் வெட்டி காயப்படுத்தியுள்ளனர்.

திமுக வினர் வன்முறைச் சம்பவங்களில் ஈடுபடுவது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. அதிலும் தேர்தல் நடைபெற்ற பின் தோல்வி கண்ட திமுகவினர் அதைத் தொடர்ந்து வன் முறைச் சம்பவங்களில் ஈடுபடுவது வாடிக்கையாக உள்ளது

நெல்லையில் சமீபத்தில் தான் இடைத் தேர்தல் நடந்தது இந்த தேர்தலின் போது இந்திரா காங்கிரஸை சேர்ந்த 23வது வார்டு உறுப்பினர் தாயப்பன் கழக வேட்பாளருக்கு ஆதரவாகப்பிரசாரம் செய்தார்

இதனால் ஆத்திரமடைந்த திமுகவினர் தாயப்பன் அவருடைய வீட்டில் இருக்கும்போது இரவு நேரம் திமுகவைச் சேர்ந்த துரைபாண்டி. சங்கரன் சக்தி. பசுபதி ஆகிய நான்கு பேர் தாயப்பனை அரிவாளால் மாறி மாறி வெட்டினார்களாம.

இதில் தாயப்பன் பாளை ஐகிரவுண்ட் அரசு மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார்

இந்த சம்பவம் குறித்து நெல்லை டவுன் போலீசார் வழக்கு பதிவு செய்து விசாரித்து வருகின்றனர்,

## ஏல விற்பனை

1 M Ganapathra jJaju, 166 Pulianthope High Road. Madras 12 ஏலத்தேதி 18-9-86 அன்று காலை 11 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று காலை 11 மணிக்குமாற்றப் பட்டுள்ளது. 2. B Mahaveerchand, 81 market Street, Perambur Madras-11 ஏலத்தேதி 18-9-86 அன்று மதியம் 1 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று மதியம் 1 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 3 Puruhotham & Co, 4, Krishna koil street Madras-1 ஏலத்தேதி 18-9-86 அன்று மதியம் 1 மணிக்கு இருந்த ஏலம் 27-9-86 அன்று மதியம் 1 மணிக்கு மாற்றப்பட்டுள்ளது. 4 C Dharmichand samdariya, 35, Murthy Iyangar Road, Vyasarpadi, Madras-39 (1-9-83 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 3-10-86 அன்று மதியம் 1 மணிக்கு 5 B Nemichand Joshi, 478, P H Road, Arumbakkam, Madras-106 (1-9-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 3-10-86 அன்று காலை 11 மணிக்கு 6 B Mahendrakumar, kothari 4, Adyar bridge road, Adyar, Madras 20 (1-5-85 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 6-10-86 அன்று மதியம் 2 மணிக்கு, 7. Mrs B. Shobadevi Jain 4, Adyar bridge road, Adyar Madras-20 (1-7-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 6-10-86 அன்று காலை 11 மணிக்கு. 8 K Chandra prakash Jain, 53 Padavattamman koil street, kosapet, Madras-12 (1-10-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 6-10-86 அன்று மதியம் 3 மணிக்கு. 9. R Mithalal Jain, 6, Anderson road. Ayanavaram Madras 23 (1-9-84 முதல் 30-7-85 வரை) ஏலத்தேதி 8-10-86 அன்று காலை 11 மணிக்கு, 10. M Sampatlal Tatta 12 Mookathal street, purasawalkam, Madras 7 (1-9-84 முதல் 30-8-85 வரை) ஏலத்தேதி 8-10-86 அன்று மதியம் 1 மணிக்கு, 11. G Madanlal & Co, 99, Papermills road Madras-11 [1-2-79 முதல் 30-5-85 வரை] ஏலத்தேதி 9-10-86 அன்று காலை 10 மணிக்கு, 12 S. Gyanchand Jain. 1. Pilkington road, Ayanavaram Madras-23 [1-7-84 முதல 30-8-85 வரை] ஏலத்தேதி 9-10-86 அன்று மதியம் 12 மணிக்கு, 13. B Sunderdevi & Co 82, Papermills road Perambur, Madras 11 [1-7-84 முதல் 30-6-85 வரை] ஏலத்தேதி 10-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 14. Sri Mahalakshmi & Co, 42. Mel patti ponnappan street, Madras-39 [1-11-84 முதல 30-8-85 வரை] ஏலத்தேதி 10-10-86 அன்று மதியம் 12 மணிக்கு, 15 Mothilal 52, Portugues church street Madras-1 [1-9-82 முதல் 30-10-83 வரை] ஏலத்தேதி 13-10-86 அன்று காலை 11 மணிக்கு, 16 Ganesh & Co 17 E H road sarmanagar, Madras-39 [1-8-83 முதல் 30-1-85 வரை] ஏலத்தேதி 13-10-86 அன்று காலை 10 மணிக்கு 17 K Magharaj parjapathi, 8 Dharmaraja koil street Madras-21 [1-8-84 முதல 30-7-85 வரை] ஏலத்தேதி 13-10-86 அன்று மதியம் 2 மணிக்கு 18. R Vijayasingh rathore 31 A, Alandur road saidapet Madras-15 [1-3-84 முதல் 30-6-85 வரை] ஏலத்தேதி 14-10-86 அன்று காலை 10 மணிக்கு 19 M P Khivraj 10 P N K Garden street, mylapore, Madras-4 [1-12-84 முதல் 31-8-85 வரை] ஏலத்தேதி 15-10-86 அன்று காலை 10 மணிக்கு 20 Sundarbai. Jain, 65, Papermills road perambur, Madras-11 [1-7-84 முதல் 31-8-85 வரை] ஏலத்தேதி 16-10-86 அன்று காலை 10மணிக்கு; 21. B Binjaram 92, Mandaveli street Madras 28 [1-7-84 முதல் 31-6-85 வரை] ஏலத்தேதி 16-10-86 அன்று மதியம் 1 மணிக்கு,

22. C BhawarlalJain 77 Canalpuram Indira nagar madras-20 [1-2-84 முதல் 31-7-85 வரை] ஏலத்தேதி 8-10-86 அன்று காலை 11 மணிக்கு 23 G Uma ram 89 Rangarajapuram road Kodambakkam, madras-24 (1-10-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 17-10-86 அன்று மதியம் 12 மணிக்கு, 24 mittalal Jain 38 Village road madras-34 (1-10-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 17-10-86 அன்று காலை 11 மணிக்கு 25 m Bhandari vimalchand 44 Pushpa nagar main road, Nungampakkam, madras-34 (1-11-84 முதல் 31-8-85 வரை) ஏலத்தேதி 20-10-86 அன்று மதியம் 1 மணிக்கு

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன். பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம் தரமசந்த் ஜெயின், நெ 150 ஆச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியாளர் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.

## டி. வி. யில் கற்பகவிநாயகம்

சென்னை, செப். 23— சென்னை வானொலியில் நாளை (24 ந்தேதி)காலை 7.25 மணிக்கு "சட்டம் என்ன சொல்கிறது"என்ற தலைப்பிலும் 25ந் தேதி மாலை 5.30 மணிக்கு சென்னை தொலைக்காட்சியில் "இந்திய அரசியல் சட்டம்" என்ற தலைப்பிலும் கழக வழக்கறிஞர் கற்பக விநாயகம் பேசுகிறார்.

# கழக-மன்றத் தோழர்கள் எடுத்த அண்ணா விழா

சென்னை, செப். 23— கழக மன்றத் தோழர்கள் நாடெங்கும் அண்ணா பிறந்தநாள் விழாவினை சிறப்பாக கொண்டாடி வருகின்றனர்.

### மதுரை

பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாவும் மதுரை மாவட்ட கழக மாணவர் அணி அலுவலகத் திறப்பு விழாவும் பெரியார் பஸ் நிலையம் அருகில் கட்ராபாளையம் தெருவில் மதுரை மாவட்ட கழக மாணவர் அணி அமைப்பாளர் அ. சேகபரீத் தலைமையில் மதுரை மாநகர எம்.ஜி.ஆர். இளைஞர் அணி பொருளாளர் எம். பி. இராஜேந்திரன், கழக வழக்கறிஞர் சங்க பொருளாளர் எஸ். நவநீத கண்ணன் ஆகியோர் முன்னிலையில் தமிழ்நாடு வேளாண்மை பொறியியல் வாரியத் தலைவரும் மதுரை மாவட்ட கழக செயலாளருமான சேடப்பட்டி இரா. முத்தையா எம்.எல்.ஏ குத்துவிளக்கு ஏற்றி அலுவலகத்தை திறந்து வைத்தார். விழாவில் என். வாசு என்ற பெரியண்ணன் எஸ், ஜீவானந்தம் உசிலை சொக்கநாதன். பண்ணை இராஜேந்திரன், தியாகராஜன். சோழவந்தான் சாலஸ் சமய நல்லூர் சுந்தரம் திருமங்கலம் அன்பழகன் வாடி சின்னச்சாமி, ஜோதிமணி. பரவை நாகராஜன் ஆகியோர் கலந்து கொண்டனர். மற்றும் ஏராளமான மாணவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். அனைவருக்கும் இனிப்பு வழங்கப்பட்டது.

### மூலனூர்

பெரியார் மாவட்டம் மூலனூர் ஒன்றியத்தில் அண்ணா பிறந்த நாள் விழாவும் கொடியேற்றுதலும் மூலனூரில் நடைபெற்றது. 500 பேருக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

பேரூராட்சி தலைவர் கே. சுப்பிரமணி தலைமையில் ஒன்றிய துணை பெருந் தலைவர் வி.பி. பெரியசாமி கொடியேற்றி வைத்தார். விழாவில் 500க்கும் மேற்பட்ட கழக தோழர்கள் கலந்து கொண்டார்கள்.

### லால் பேட்டை

தென்னாற்காடு மாவட்டம் லால் பேட்டை பஸ் நிலையம் அருகில் எம்.ஏ. அபுசாலி தலைமையில் ஜப்பார் குணாளன் முன்னிலையில் நடைபெற்ற அண்ணா பிறந்தநாள் விழாவில் எ.ஏ. பஜிலுதீன். சையத்அலி மற்றும் பலர் பங்கேற்றனர்,

### கடலூர்

கடலூரில் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா குப்புசாமி தலைமையில் நடைபெற்றது

விழாவில் வியாகத் அலிகான், எப. கண்ணன், திருவை அண்ணாமலை, முருகமணி, அன்புதண்டபாணி, பெ ராஜாராம், கே, என். தங்கமணி, ஏ. ரகுபதி கிருஷ்ணராஜ் மற்றும் ஏராளமான மாணவர்கள் கலந்து கொண்டனர்.

### சிதம்பரம்

சிதம்பரத்தில் நடைபெற்ற அண்ணா பிறந்த நாள் விழாவையொட்டி பல்வேறு இடங்களில் கழக கொடியேற்ற பட்டது பரங்கிப் பேட்டை ஒன்றிய ஊராட்சித் தலைவர் பி எம். இராஜவேல அண்ணா பிறந்த நாளை யொட்டி பரங்கிப் பேட்டை ஒன்றிய பகுதியில் பல கிராமங்களில் கழக கொடியை ஏற்றி வைத்தார். ஏழை எளியோர்களுக்கு இலவச உணவு வழங்கப்பட்டது. சமுதாய நலத் திட்டத்தின் கீழ் பலருக்கு தொழிற்கருவிகளை வழங்கினார்.

சிதம்பரத்தில் நடைபெற்ற கழகபொதுக் கூட்டத்தில் தமிழ்நாடு கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் இணைய தலைவர் க. கலைமணி கலந்து கொண்டு பேசினார்

மற்றும் கே. ஆர். சணபதி. நகர செயலாளர் சு, எஸ் இராமதுரை மாவட்ட பால்வள தலைவர் முத்து கோவிந்தராசன், மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற துணை செயலாளர் இராம ஆதமூலம் உள்பட பலர் பேசினார்கள்.

### நெல்லிக்குப்பம்

நெல்லிக்குப்பத்தில் நடைபெற்ற அண்ணா பிறந்த நாள் விழாவில கழக சட்டமன்ற உறுப்பினர் துரை அன்பரசன் கலந்து கொண்டு நகரத்தின் பல்வேறு பகுதிகளில் கழக கொடியை ஏற்றி வைத்து, குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கினார்.

அவருடன் நகர செயலாளர் மா, வேலாயுதம், வெங்கடபதி, மாலிக், ஜின்னா, சவுந்தரராசன் ஜெயபால் விபீஷணன், சவுந்தர் இராமானுஜம். தேவநாதன். சுப்புராயன் உள்பட பலர் கலந்து கொண்டனர்

### திட்டக்குடி

மங்களூர் யூனியன் தலைவர் வாகை இளங்கோவன் துணைத் தலைவர் துரை. பன்னீர்செல்வம் ஒன்றிய செயலாளர் பழனி முத்து ஆகியோர் கலந்து கொண்டு மங்களூர் ஊராட்சி ஒன்றிய பகுதிகளில் உள்ள 40 கிராமங்களில் அண்ணா பிறந்த நாளை மிகச் சிறப்பாக கொண்டாடினர். ஆயிரம் பேருக்கு உணவு வழங்கப்பட்டது, பல்வேறு இடங்களில் வாகை. இளங்கோவன் கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.

### தஞ்சை

தஞ்சை மாவட்டம் பேராவூரணியில் அறிஞர் அண்ணாவின் 78வது பிறந்தநாள் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பேராவூரணி நகரில் பல்வேறு பகுதிகளிலும் தொகுதியின் பேரூராட்சிகள் மற்றும் கிராமங்கள் தோறும் கொடியேற்று விழாக்கள் நடத்தப்பட்டு இனிப்புகள் வழங்கப்பட்டன.

இன் தொடர்ச்சியாக பேராவூரணி தியாகி வேதாசம் அரங்கில் அண்ணா பிறந்தநாள் விழா பொது கூட்டம் நடைபெற்றது. கூட்டத்துக்கு பேராவூரணி பேரூராட்சித் துணைத்தலைவர் வி. என். டக்கிரிசாமி தலைமை வகித்தார். இக்கூட்டத்தில் கலந்து கொண்டு தமிழக பிற்படுத்தப்பட்டோர் நலம் மற்றும் மீன் வளத் துறை அமைச்சர் எம். ஆர். கோவேந்தன் பேசினார்

### உடன்குடி

திருச்செந்தூர் தொகுதி உடன்குடி ஒன்றிய கொட்டங்காடு நகரில் நடைபெற்ற அண்ணா பிறந்த நாள் விழாவில் மாணவ மாணவியர்களுக்கு எஸ். ஆர் சுப்பிரமணிய ஆதித்தன் எம். எல். ஏ, சீருடை வழங்கினார்.

விழாவில் சுந்தர்ராஜ் சுடலை சனி புரட்சிக்கலை, சம்பத்குமார். டி. தாமோதரன். செல்லத்துரை சாயல்மவுலானா. கோவில் பிச்சை, ராமச்சந்திரன் மற்றும் பலர் பேசினர்.

### வியாசர்பாடி

வியாசர்பாடி 22-வது வட்டத்தில் தாமோதரன் நகரில் நடைபெற்ற அண்ணா பிறந்த நாள் விழாவில் ஜே. சி. டி. பிரபாகரன், என். வி. என செல்வம். சி. ஜெயபால் உதயகுமார். என். கே. சூரியன் துறைமுகம் காஜா எஸ். ராஜேந்திரன். இ. மூர்த்தி, ரமேஷ், அன்பு, சண்முகம் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

### தேனி

தேனி அல்லி நகரத்தில் அண்ணா பிறந்தநாள் விழா கூட்டம் நகரச்செயலாளர் காமாட்சி தலைமையில் செலவேந்திரன் எம். பி. முன்னிலையில் நடைபெற்றது.

இவ்விழாவில் ஜெயராமன் எம். எல். ஏ. ஜெயமணி, வெற்றிராசன், சிவகுருநாதன், தர்மர் மொக்கைபாண்டி, பிச்சைமணி, சவனாண்டி, நலலதம்பி, சுப்பச் சாமி. முருகேசன். தங்காஜ், ஜமால் லோகநாதன, சுந்தரராஜன. சோலை அழகு, மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

### திருவட்டார்

திருவட்டார் ஒன்றியத்தில் அண்ணா பிறந்த தின விழா கூட்டம் வக்டர் தலைமையில் கேசவன் முன்னிலையில் நடைபெற்றது. ராஜ்குமார் கழகக் கொடியினை ஏற்றி வைத்தார். இவ்விழாவில் குமார ரமேஷ்குமார், ஐயப்பன், ராஜகுமார் மற்றும் பலர் கலந்து கொண்டனர்

### ராஜாக்க மங்கலம்

ராஜாக்கா மங்கலம் ஒன்றியச் சார்பில அண்ணா பிறந்த தினவிழாவும், கழக கொடியேற்று விழாவும் வடக்கு சூரன்குடியில் நடை பெற்றது இவ்விழாவில் கோவிந்தராசன, பொன் ராஜகோபால, ராஜ்குமார் சேகர், கனகராஜ், சுப்பிரமணியம், ஐயப்பன், ராஜேந்திரன் சுரேந்திரன், நாகராசன, ஆண்ட்ரோஸ. சுப்பிரமணியம், ரமேஷ்குமார். ஆசைமரியான், முத்தையாபிள்ளை, செல்வராஜ், மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

### சகாயபுரம்

வெங்களூர்சகாயபுரத்தில் அண்ணா பிறந்த தினவிழா கூட்டம் கைலாசம் தலைமையில், நடைபெற்றது. இவ்விழாவில் முனியப்பா, அப்பு சம்பங்கி ராமையா, கிருஷ்ணராஜமூர்த்தி, தங்கவேல். முத்துகுமார், கலைஅரசன், பலராமன், நாராயணன், சிதம்பரம், நசீர். மூர்த்தி. காணிக்கராஜ் கார்த்திகை சாமி, செல்வம் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

### குழித்துறாம்

விளவன

குழித்துறாம் வினையில் அண்ணா பிறந்ததின விழா தங்கமணி தலைமையில், கஜேந்திரன் முன்னிலையில் நடைபெற்றது. இதில் ராஜ்குமார், ராஜேந்திரன், பால்தாஸ், நாகராசன், ராஜகோபால் ராஜேந்திரன், ஜகன் இரணியல், சுகுமாரன், ராதாகிருஷ்ணன், அஞ்சாலிராஜாமணி நடேசன் மற்றும் பலர் கலந்துகொண்டனர்

## ஜைல்சிங் ஜாம்பியா பிரதமர் சந்திப்பு

புதுடெல்லி, செப் 23— இந்தியா வந்துள்ள ஜாம்பியா பிரதமர் முசோகோதாவனே, ஜனாதிபதி ஜைல்சிங்கை புதுடெல்லியில் சந்தித்துப் பேசினார். இருவரும் அரைமணி நேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

## தங்கம் கடத்தல்: பெண் கைது

ஹைதராபாத், செப். 23— குக்கரின் அடிபாகத்தில் ரகசியமாக ஒளித்து வைத்து ரூபாய் 28 லட்சம் மதிப்புள்ள தங்கக் கட்டிகளை கடத்தியதாக அபுதாபியிலிருந்து ஐதராபாத் விமான நிலையத்தில வந்திறங்கிய ஒரு பெண் பயணியை சுங்க அதிகாரிகள் கைது செய்தார்கள்,

சந்தேகத்தின் பேரில் கைது செய்யப்பட்ட அந்த பெண் பயணியின் கையிலிருந்த சமையல் குக்கரை அதிகாரிகள் சோதித்துப் பார்த்தார்கள். குக்கரின் அடிபாகத்தில் இருந்த ஒரு பிளேட்டை திறந்து பார்த்ததல் அதில் 12 ஆயிரத்து 763 கிராம் எடையுள்ள தங்கக்கட்டிகள் அடுக்கடுக்காக வைக்கப்பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

# சென்னையில் சுங்க அதிகாரிகள் சோதனை: கல்வீச்சு போலீசார் காயம்

சென்னை. செப். 23- சென்னையில் சுங்க அதிகாரிகள் நடத்திய சோதனையை அடுத்து பர்மா பசாரில் நடந்த கல்வீச்சில் 40-க்கும் மேற்பட்ட போலீசார் காயமடைந்தனர்.

சென்னை பர்மாபஜாரில் வெளி நாடுகளிலிருந்து தாயகம் திரும்பிய, தமிழர்கள் கடை வைத்து நடத்தி வருகிறார்கள் இங்கு வெளிநாட்டுப் பொருட்கள் விற்பனை செய்யப் படுகின்றன

நேற்று காலை சுங்க இலாகா அதிகாரிகள் திடீரென்று பர்மாபஜாரில் உள்ள எல்லா கடைகளுக்கும சீல் வைத்தனர்.

### நோட்டீஸ்

மற்றும் ஒவ்வொரு கடைகளிலும நோட்டீஸ் ஒட்டினர்.

அந்த நோட்டீசில் கூறப்பட்டுள்ளதாவது:-

பர்மா பஜாரில் உள்ள கடைகளில் 1961-ஆம் ஆண்டு சுங்க சட்டத்தின் கீழ் பறிமுதல் செய்யக்கூடிய வெளிநாட்டு பொருட்கள் வைக்கப்பட்டு இருப்பதாக நம்பகமாகத் தெரிகிறது.

எனவே இதற்குரிய சொந்தக்காரர்கள அல்லது பொறுப்பாளர்கள் உடனே இன்று பிற்பகல் 2-30 மணிக்குள் சென்னை சுங்க இலாகா துணைகலெக்டர் ரமேஷ் சிங்கை சோதனைக்காக நேரில் தொடர்பு கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

மேற்கண்டவாறு நோட்டீசில் கூறப்பட்டுள்ளது.

பர்மாபஜாரில் உள்ள கடைகளின் முன்பு மத்திய ரிசர்வ் போலீசார் துப்பாக்கி ஏந்தியபடி காவலுக்கு நின்றனர்.

நேற்று காலை வழக்கம் போல் கடைகளை திறக்க கடைக்காரர்களும் சிப்பந்திகளும் வந்தனர் கடைகள் "சீல்" வைத்திருப்பதை பார்த்ததும அவர்கள் அதிர்ச்சி அடைந்தனர் இதனால் கடைகளின் முன்பு வியாபாரிகள் கூடிவிட்டனர்.

அப்போது அங்கு பரபரப்பான சூழ்நிலை ஏற்பட்டது

நேற்று பிற்பகல் 2½ மணி வரை எந்த கடைக்காரர்களும கலெக்டரை சந்திக்க செல்லவில்லை. இதற்கிடையில் நேற்று மாலை 4 மணி அளவில் அதிகாரிகள் அந்த பகுதிக்கு சென்றனர். அப்போது கூட்டம், கூட்டமாக நின்று கொண்டிருந்த வியாபாரிகள் அவர்கள் மீது கல் வீச ஆரம்பித்தனர் சோடா பாட்டில்களையும் வீசி தாக்கினர்.

இதனால அப்பகுதியில் பயங்கர கலவரம் மூண்டது. ரோடில் சென்ற பஸ்கள் மீதும் கற்கள் வீசப்பட்டன.

### போலீஸ் தடியடி

கலவரத்தை அடக்க போலீசார் முதலில் தடியடி நடத்தினர்.

இதில் போலீசார் உட்பட பலர் காயமடைந்தனர்.

கலவரம் காரணமாக பாரிஸ் கார்னர் பகுதியில் பஸ் போக்குவரத்து பெரிதும் பாதிக்கப்பட்டது.

இதனால் பஸ் போக்குவரத்துக்கள் மாற்றி விடப்பட்டன

### 34 பஸ்கள் சேதம்

கல்வீச்சில 34 பஸ்கள் சேதமடைந்தன. அப்பகுதியில் உள்ள ஒரு பெட்ரோல் பங்கும் சேதமடைந்தது.

இந்த கலவரத்தில் 70 பேர் காயமடைந்தனர். இதில் 31 பேர் போலீசார் 2 போலீசாரும் பொது மக்களில் இருவரும் பலத்த காயமடைந்துள்ளனர்.

### ரூ. 1 கோடி

டெல்லியைச் சேர்ந்த சுங்க இலாகா அதிகாரிகள் சோதனை செய்வதற்காக ரகசியமாக சென்னை வந்து இருக்கிறார்கள், சென்னையில் உள்ள சில வியாபாரிகள வீட்டிலும் அவர்கள சோதனை நடத்தினர்.

சோதனையின் போது ஒரு வியாபாரி வீட்டில் மட்டும் ஒரு கோடி ரூபாய்க்கு "வீடியோ" விற்றதாக தெரியவந்தது சில தஸ்தாவேஜுகளும் சிக்கின, அவரிடம் அதிகாரிகள் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

### பறிமுதல்

பர்மா பஜாரில் 5 கடைக்காரர்கள் மட்டும் சோதனை போட அனுமதித்தனர். அந்தசோதனையில் 70 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் பறிமுதல் செய்யப்பட்டன மற்றும் உள்ள 365 கடைகள் தொடர்ந்து "சீல்" வைக்கப்பட்டுளளது.

இம்மாதிரி சோதனைகளை இந்தியா முழுவதிலும் சுங்க இலாகா அதிகாரிகள நடத்தினர்

### துப்பாக்கிச் சூடு

பம்பாயில் சுங்க இலாகா அதிகாரிகள் சோதனை நடத்தியபோது அங்கு கலவரம் ஏற்பட்டது

இதனால் போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர் இதில் ஒரு குழந்தை குண்டு பாய்ந்து இறந்தது குறிப்பிடத்தக்கது.

இந்த சோதனை தொடர்ந்து நடைபெறும் என்று அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

## சொகுசுபஸ்சிலேயே மேல்திருப்பதி செல்லஅனுமதி

திருப்பதி. செப் 23— வெளி இடங்களிலிருந்து திருப்பதி கோவிலுக்கு செல்லும் பக்தர்கள் கீழ் திருப்பதியில் தங்கள் பஸ்களை நிறுத்தி விட்டு மேல் திருப்பதிக்கு அரசு பஸ்சில் தான் செல்ல வேண்டும் பக்தர்களின் வசதியை கருத்தில் கொண்டு இனிவெளிஇடங்களிலிருந்து பஸ்சில் வருபவர்கள் அதே பஸ்சிலேயே மேல் திருப்பதி சென்று ஏழுமலையானை தரிசிக்கலாம்.

இதற்கு அனுமதி வழங்க ஆந்திர மாநில போக்குவரத்து கழகம் உத்தேசித்துள்ளதாக செய்திகள் தெரிவிக்கின்றன.

# சத்துணவில் முறைகேடு 14 பேர் தற்காலிக நீக்கம்

ராமநாதபுரம் செப் 23- சத்துணவில் முறைகேடு புரிந்த 14 ஊழியர்களை தற்காலிகமாக வேலை நீக்கம் செய்து அமைச்சர் சவுந்தரராசன் உத்தரவிட்டார்.

சத்துணவுத் துறை அமைச்சர் சவுந்தரராசன ராமநாதபுரத்திற்கு வருகைபுரிந்தார். மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் (சத்துணவு) கண்ணன மற்றும் உயர் அதிகாரிகள் அவரை வரவேற்றனர். ராமநாதபுரம் நகர் மற்றும் சுற்றுப் புறங்களில் உள்ள முதலமைச்சர் சத்துணவு மையங்களை திடீர் சோதனை செய்தார்.

ராமநாதபுரம் நகராட்சி சிடைச்சாரந்தமையம்-13ல் திடீர் சோதனை செய்யும் போது அங்கு குழந்தைகளுக்கு சத்துணவு வழங்குவதில் உள்ள முறைகேடுகள் கண்டு பிடிக்கப்பட்டது சத்துணவுமைய அமைப்பாளர் புஷ்பவள்ளி உடனடியாக தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டார்

மையம் 12—ல் திடீர் ஆய்வு செய்த போது அத்தியாவசிய பொருட்கள் கணக்கில் குறைவாக இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. காய்கறிகளும் போட வேண்டிய அளவிற்கு மிகக் குறைவாக போடப் பட்டு இருப்பதும் கண்டுபிடிக்கப்பட்டது. 25 குழந்தைகள் வந்திருந்தனர் ஆனால வருகைப்பதிவேட்டில் 40 குழந்தைகள் வந்ததாக கணக்கு காட்டப் பட்டு இருந்தது. இச்சத்துணவு அமைப்பாளர் ஆதிலஷ்மி, உதவியாளர்கள் நம்பம்மாள், மீனா ஆகியோர் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டார்கள்.

### உணவு அளவில் மோசடி

சக்கரக் கோட்டையைச் சார்ந்த ஆரம்பப்பள்ளி சத்துணவு கூடத்தில் சாப்பாடு காய்கறி பற்றாக் குறையினால் சுவையில்லாமல் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது சாதமும் மிகக்குறைவாக வடிக்கப் பட்டிருந்தது. பல்பொடியும் சென்ற மாதம் கொடுக்கப்படாமல் இருந்ததும் கண்டுபிடிக்கப் பட்டது. இதனால அமைப்பாளர் சந்திரா உதவியாளர் புஷ்பா ஆகியோர் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டனர். சக்கரக் கோட்டையைச் சார்ந்த சத்துணவு கூடத்தில் சுகாதார அட்டை நிரப்பப்படாமல் இருந்ததும் குழந்தைகளுக்கு விளையாட்டு சாமான்கள் கொடுக்கப்படாமல் இருந்ததும், குழந்தைகளின் உடல்நலம் குறித்து எந்த விதமான நடவடிக்கைகளும் எடுக்காமல் இருந்ததும் சமைத்துக் கொண்டு இருந்த சத்துணவு அளவுக்குக்குறைவாக இருந்ததும் கண்டுபிடிக்கப்பட்டு இச்சத்துணவு மைய அமைப்பாளர் ராமுத்தாய் உடனடியாக தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டார்.

இதுபோல் ராமநாதபுரம் நகர். செற்குரதவீதி, அழகன்குளம். ராஜவீது, ஆகிய இடங்களிலும் முறைகேடுகள் இருப்பதை கண்டறிந்த அமைச்சர் சவுந்தரராசன் அதன் பொறுப்பாளர்களை தற்காலிக பணி நீக்கம் செய்து உத்தரவிட்டார்.

ராமநாதபுரம் நகராட்சியில் எண் 8 மற்றும் ரசத் துறை மையங்கள் சிறப்பாக செயல்படுவதைக் கண்ட அமைச்சர் அதன் அமைப்பாளர்களைப் பாராட்டி பரிசு வழங்கினார்.

## 'ஆவின்' பால் பற்றிய அறிவிப்பு

சென்னை, செப். 23— 'ஆவின், பால பிளாஸ்டிக் பைகளில் வழங்கப்படுவதில் செய்யப்பட்டுள்ள மாற்றம் குறித்து 'ஆவின். நிர்வாக இயக்குநர் தெரிவித்துள்ளதாவது:—

நடைமுறையில் உள்ள சிரமங்களினால கடந்த 20 ந்தேதி பிற்பகல் முதல நிலைப் படுத்திய பாலுக்கு பதிலாக பதப் படுத்திய பால் வழங்க நேர்ந்துள்ளது. வாடிக்கையாளர்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள இச்சிரமத்தை நிலைப்படுத்திய பால் வழங்கு வரை சிறிதுகாலத்திற்கு பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளப்படுகிறார்கள்.

நிலைப் படுத்திய பாலுக்கும், பதப் படுத்திய பாலுக்கும் இடையே உள்ள வித்தியாசத் தொகை வாடிக்கையாளர்கள் அடுத்த மாதம் பால அட்டையை புதுப்பிக்கும் போது சரிக்கட்டப்படும். நிலைப்படுத்திய பால் என அச்சிடப்பட்ட பாலிதீன் பைகளில் தற்சமயம் பதப்படுத்திய பால் வழங்கப்படுகிறது.

பாலித்தின் பைகளின் மேல் "நிலைப்படுத்திய பால்" என அச்சிடப்பட்டுள்ளதை நேர மின்மைக் காரணமாக "பதப்படுத்திய பால்" என அச்சிட இயலவில்லை எனவே வாடிக்கையாளர்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள சிரமத்தை பொருட்படுத்தாமல் தங்கள் மேலான ஒத்துழைப்பை தொடர்ந்து நல்குமாறு கோருகிறோம்.

# ஆசிரியர்களுக்கு அமைச்சர் ராமசாமி வேண்டுகோள்

ராமநாதபுரம். செப். 23- சிறந்த மாணவர்களை உருவாக்கி நலலதொரு சமுதாயம உருவாக்க ஆசிரியர்கள முன்வர வேண்டுமென்று அமைச்சர் ராமசாமி வேண்டுகோள் விடுத்தார்.

ராமநாதபுரம் மன்னர் மேல் நிலைப் பள்ளியில் அமைச்சர் ராமசாமி தலைமையில் ஆசிரியர் தினவிழா நடைபெற்றது. மாவட்ட முதன்மைக்கல்வி அலுவலர் (பொறுப்பு) சுப்பிரமணியம வரவேற்பு உரையாற்றினார்.

அமைச்சர் இராமசாமி பேசியதாவது:-

ஆசிரியர் தினம் ராமநாதபுரத்தில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. எதிர்கால சமுதாயத்தின் நல்வாழ்விற்கு வழிகாட்டியாக விளங்குபவர்கள் ஆசிரியர்கள் ஆவர். தமிழக அரசு ஆசிரியர்களின் சமுதாயப் பணியினை மனதில் கொண்டு ஆசிரியர்களுக்கு சேவை மனப்பான்மையோடு பல உதவிகளை அளித்து வருகின்றது. பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழகத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றபிறகு தான் மாநில அளவில் நல்லாசிரியர் விருதுகள் வழங்கப்பட்டு வருகின்றன. முன்பெல்லாம் நல்லாசிரியர்கள் விருதுகள் தேசிய அளவில்தான் வழங்கப்பட்டு வந்தன

இந்த ஆண்டு ராமநாதபுரம் மாவட்டத்தில் 4 ஆசிரியர்களுக்கு நலலாசிரியா விருது கிடைத்துள்ளது.

### ஒத்துழைப்பு

ஆசிரியர்களுக்குள்ள கடமைகளை கருத்தில் கொண்டு ஆசிரியர் சமுதாயத்திற்கு முதலவர் புரட்சித் தலைவர் சலுகைகள் பல வழங்கியுள்ளார். தமிழக அரசின் நிதிநிலை அறிக்கையில் பெருவாரியான தொகையை கல்விக்காகவும், ஆசிரியர்களின் மேம்பாட்டிற்காகவும் ஒதுக்கியுள்ளது. நல்லெண்ணம் படைத்த ஆசிரியர் பெருமக்கள் சிறந்த மாணாக்கர்களை உருவாக்கித் தந்து நல்லதோர் தமிழ்ச்சமுதாயம் உருவாக்கிட ஒத்துழைப்புத் தருதல் வேண்டும், இவ்வாறு அமைச்சர் இராமசாமி பேசினார்.

### கலை நிகழ்ச்சி

விழாவில் ஓய்வு பெற்ற ஆசிரியர்களுக்கும் நலலாசிரியர் விருது பெற்றவர்களுக்கும் டாக்டர் அரவிந்தராஜ் பொன்னாடை போர்த்தினார்

நகரவை பள்ளி மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

# காதலர்களை சேர்த்து வைக்க கழகத் தோழர் பட்ட துயரம்

புதுக்கோட்டை. செப் 23— காதலனும், காதலியும் திருமணம் செய்து கொள்ள கழகத்தோழர் ஒருவர் கை கொடுத்து உதவினார் இதனால் பெண்ணைக் கடத்தி விட்டார் என்ற பழிச்சொல்லுக்கு ஆளானார். கழகத்தோழர் பட்ட துயரங்களை எண்ணி காதல் ஜோடி, மனம் நெகிழ்ந்து நன்றி கூறியது

புதுக்கோட்டை நகர மன்ற கழக உறுப்பினர் செல்வமணி.

பரீதா என்ற ஒரு பெண்ணைக் கடத்தி விட்டதாக அபாண்டம் கூறப்பட்டது.

உண்மை என்ன வென்றால் பரீதா என்ற 19 வயது பெண்ணுக்கும் புகழேந்தி என்ற 24 வயது ஆசிரியருக்கும் காதல் இருந்து வந்தது. காதலர்கள் திருமணம் செய்து கொள்ள விரும்பினார்.

இதற்கு முட்டுக்கட்டை ஏற்பட்டது புகழேந்தி கழகத் தோழர் செல்வமணி உட்பட தனது நண்பர்களை நாடினார்.

அவர்களது உறுதியான காதலைக் கண்டு செல்வமணியும் மற்றவர்களும் ஒத்துழைப்பு அளித்தனர்.

பரீதாபேகமும் புகழேந்தியும் ஒரு கோவிலில் வைத்து திருமணம் செய்து கொண்டனர். பரீதாபேகம் தனது பெயரை வசந்தா என்று மாற்றிக் கொண்டார்.

மாப்பிள்ளை வீட்டார் இந்தத் திருமணத்தை மகிழ்ந்து ஏற்றுக் கொண்டனர்.

ஆனால் பெண்ணின் தந்தை இதுபற்றி புகார் செய்துள்ளார். சிலர் தூண்டுதலால் தனது மகளை சினிமா நடிகை ஆக்க விரும்பினார் பரீதாவின் தந்தை.

ஆனால பரீதாவுக்கு சினிமா நடிகை ஆகும் ஆசை இல்லை. காதலனை கைபிடிக்கவே விரும்பினார்.

கழகத்தோழர் செல்வமணி உதவியுடன் திருமணம் நடந்தது.

திருமணம் முடிந்த பின் புது மாப்பிள்ளை புகழேந்தி கூறுகையில் "கவுன்சிலர் செல்வமணியும் நானும் பால்ய நண்பர்கள் என்னால் என் நண்பனுக்கு ஏற்பட்ட அவதூறை தாங்க முடியவில்லை. இருப்பினும் ஆபத்தில் உதவுபவன் நண்பன் என்பதை நிரூபித்த எனது நண்பனை மறக்கமாட்டேன். எங்கள் காதலை அழியா ஓவியமாக்கிய நண்பன் அவன்தான்" என்று கூறினார்.

கழகத்தோழர் செல்வமணி கூறும் போது "என் நண்பனுக்கு நான் செய்ய வேண்டியதைச் செய்தேன் நன்மை செய்யும் போது நம்மை பலர் எதிர்க்கின்றனர். அவர்கள் திருந்துவார்கள் என்பது உறுதி என்று குறிப்பிட்டார்.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed at Anna ... Perarignar Anna Trust Press at 34, ... Manickam Road MADRAS-...